எழிலரசி-
ராய்ப்பூர்
இளவரசி
யாரோ?

'மிஸ் ஏஷியா 1973'*

சிங்காரி, ஒய்யாரி, சுகம்தரும்
அழகுராணி, இங்கிதமாய் எழில்
சேர்க்கும் டெரிலேஸ்டு ரூபியா
துணியிலே மங்கை அணிந்திடுவாள்
மாக்ஸியும் பிளவுசும்.
டெரிலேஸ்டு ஃபுல்வாயில் புடவை
பூமேனியில் உறவாடும் புத்தெழில்
சேர்க்கும்.
டெரிலேஸ்டு புட்டா அவளுக்குத்
தேனாய் இனித்திடும்.
தேடி அணிந்திடுவாள் வாயில்கள்,
ரூபியா, பிரிண்டட் லான்கள்,
ஸ்க்ரீன் பிரிண்டட் பாப்ளின்கள்...
அழகு ராணி, இவற்றில் எதனை
அணிந்தாலும் இவளே
ராய்ப்பூர் இளவரசி'
ராய்ப்பூர் இளவரசியாய் விளங்க
வாய்ப்புண்டு உங்களுக்கும்!

* தாரா ஃபான்சேகா—
'மிஸ் ஏஷியா 1973'



ராய்ப்பூர் மில்ஸ்
ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் க்ரூப்
துணிகள்

CMLB.30.162 R TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எஸ்.. படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு. சென்னை-1, 76, கிழக்கு மாரட் தெரு. மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1. M/S. ஜல்வரீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.

ஆரஞ்சு பிரைட்!
ஆரஞ்சு பிரைட்!
ஆரஞ்சு பிரைட்!
ஆரஞ்சு பிரைட்!
ஆரஞ்சு பிரைட்!

இந்த ரேஸ்
விளையாட்டிலே
நமக்கு நல்ல
அடி!

ஆரஞ்சு
சட்டையணிந்த
அந்த ஜாக்கிதான்
முந்தி வருவார்.
என்ன பந்தயம்
கட்டறே?

ஆரஞ்சு பிரைட்
ஒன்றுக்கு
ஐம்பதாக
ஜெயிக்கப்
போகுது!

அந்த
ஜாக்கின்னு
ஜாக்கிதான்!

சுவை நிறைந்தது.
மணம் மிகுந்தது.
தாகம் தணிப்பது.
உற்சாகம் அளிப்பது.
புதுவேகம் தருவது.

கோல்ட் ஸ்பாட்®
தணித்து வைக்கிறது—
தாகத்தை,
தோல்வி தந்திட்ட
மனச் சோகத்தை,
பணப்பை கரைந்த
வேகத்தில் விளைந்த
தாபத்தை.

சோர்வடையும்போது
சுறுசுறுப்பு அளித்திடச்
சுவைத்துப் பருகுவீர்
கோல்ட் ஸ்பாட்!







® ரெஜிஸ்டெர்ட் டிரேட் மார்க்.
ஆரஞ்சு சுவை மணக்கும்
'கோல்ட் ஸ்பாட்' அனுமதிக்கப்பட்ட
மணமும் காப்பு இரசாயனங்களும்
அடங்கியது.

AIYARS-PB.12 TM

# What do seven different tyre companies have in common?




**That's it. Nircord - India's first nylon tyre cord. Nircord is the super-strengthener for all better-grade tyres made in India today.**

# nircord®

® Regd. Trade Mark

**Nirlon Synthetic Fibres & Chemicals Ltd.**

Nirlon House, 254-B, Dr. Annie Besant Road, Bombay-400 025.

Interpub/NIR-C/46A/74

# கல்கி பொருளடக்கம்

ஆனந்த, வைகாசி, 5 — மே 19, 1974




ஐந்தாவது திட்டம் ஆரம்பமாகிறது ... 5
செய்திகள் பல சிந்தனைகள் சில ... 6
கார்ட்டூன் ... 7
அம்பாளை உபாசிப்பதன் பலன் — 6 ... 9
வெய்யிலோ வெய்யில்! ... 11
சிவகாமியின் சபதம் ... 15
கதைக்குள் கதை ... 24
நரம்பின்றி ஓர் உறுப்பும் அசையாது ... 26
விண்ணும் மண்ணும் ... 31
ஆசைகள் மடிவதில்லை ... 40
கறுப்பை வாழ்த்துவோம் ... 42
'மினி'க் கதைகள் மூன்று ... 50
சட்டைக்காரி ... 55
தாய் வீடு ... 56
நமக் குறாம் ... 63


மேலட்டை:

பூத்துக் குலுங்கும் மலர் வனத்தில்
பார்த்து மகிழும் முகமலர்கள்

வண்ணப்படம்: வித்யாவ்ரதா

''கல்கி''யில் வெளியாகும் கதைகளின் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

## பச்சிள மேனியைக் காப்பதற்கே
## பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்! பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளையப் பிஞ்சு மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேணுதவி**

*Johnson & Johnson**






லின்டாஸ்-J&J. 4-140 TM

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 33 -- இதழ் 42

# ஐந்தாவது திட்டம் ஆரம்பமாகிறது!

ஐந்தாவது திட்டத்தின் முதல் ஆண்டாகிய 1974–75 ஆண்டுக்கு முதலீடுகளும் ஒதுக்கீடுகளும் ரூ. 4844 கோடி அளவில் இருக்கும் என்று மத்திய அரசும் திட்டக் கமிஷனும் முடிவு செய்துள்ளன. பார்லிமெண்டும் இதை ஒரு வருடாந்தரச் சடங்கு போலவே ஏற்றுக் கொண்டிருக்கிறது.

1973–74ம் ஆண்டில் திட்ட இனங்களுக்காகச் செலவு செய்யப்படும் அளவுக்கு 20 சதம் அல்லது ஐந்தில் ஒரு மடங்கு இது அதிகம். ஐந்தாவது திட்டத்தின் இறுதித் தொகை எவ்வளவு என்று இன்னமும் முடிவு செய்யப்படவில்லை. எனினும் திட்டம் எப்படியும் நடைபெற வேண்டும் என்ற நோக்கத்துடன் முதலில் உத்தேசித்துள்ளபடியே இனங்களும் ஒதுக்கீடுகளும் வகுக்கப்பட்டுள்ளன.

இவற்றை நிறைவேற்றி வைக்க முடியுமா, இவற்றுக்கான சாத்தியக் கூறுகள் இப்போதுள்ள சீர்கெட்ட பொருளாதார நிலைமையில் எப்படி இருக்கின்றன என்பதைப் பற்றி அதிகாரத்தில் உள்ள எவருமே சிந்தித்ததாகத் தெரியவில்லை. கொள்கைப் பிடிவாதமும், அசட்டுக் கௌரவமும் மட்டுமே அரசுக்கு முக்கியமாகிவிட்டன. உற்பத்திச் சுணக்கமும், கச்சாப் பொருள்களுக்குத் தட்டுப்பாடுகளும், விலைவாசி ஏற்றமும் எந்தத் திட்டத்தையும் முறியடையச் செய்யும். சென்ற ஓராண்டு காலத்தில் மட்டும் விலைவாசிகள் 25 சதம் உயர்ந்துள்ளன.

இந்தச் சாமானிய உண்மை சாமானிய அறிவுள்ள மக்களுக்குக்கூடத் தெரியும். அப்படியிருந்தும் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தவும், 5 அல்லது 6 சதவீதம் பொருளாதாரத்தை அபிவிருத்தியடையச் செய்யவும் முதல் ஆண்டுத் திட்டம் வகுக்கப்பட்டிருப்பதாக அரசாங்கம் கூறுகிறது. இதைக் கண்டு அழுவதா, சிரிப்பதா? ஆனால் இதற்காக என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறது என்பதனை விளக்கவில்லை. நோட்டு அச்சடித்து வழங்குவது 125 கோடிக்கு மேல் போகாது என்று மட்டும் உறுதி சொல்கிறது. ஆனால் ஐந்தாவது திட்டத்தின் முதல் ஆண்டு ஆரம்பிக்கும் போதே இந்த அளவுக்கு அதிகமான பணவீக்கம் ஏற்பட்டிருக்கிறது என்று பல நிபுணர்கள் கருதுகின்றனர்.

திட்டம் உத்தேசித்துள்ளபடி நிறைவேற வேண்டுமானால், அரசாங்கம் குறைந்தபட்சம் நான்கு காரியங்களைச் செய்ய வேண்டும். (1) முக்கியமான பொருள்களுக்கும், அரசாங்கம் அளிக்கும் பொதுசேவைகளுக்கும் விலைகள் இப்போதுள்ள அளவிலேயே நிலைக்கச் செய்ய வேண்டும். ஐந்தாண்டு காலத்துக்கு இதே அளவில் இவை இருக்கும் என்று மக்களுக்கு உறுதி அளிக்க வேண்டும். முக்கியமான பொருள்கள் என்ற இனத்தில் எஃகுப் பொருள்கள், நிலக்கரி, உலோக வகைகள், சில கச்சாப் பொருள்கள், உணவுப் பண்டங்கள் முதலியவை அடங்கியிருத்தல் வேண்டும். சேவைகள் என்ற வகையில், ரயில் கட்டண விகிதங்கள், விமானப் போக்குவரத்துக் கட்டணங்கள், மின்சார சப்ளை முதலியவைகளும் இடம் பெற வேண்டும். (2) இப்போது வசதிகள் முழுமையாக அமையப் பெற்றும், தொழில்களில் உற்பத்தி முழு அளவில் நடைபெறுவதற்குள்ள காரணங்களை ஆராய்ந்து, அவற்றைப் போக்கி, முழு உற்பத்தி ஏற்படுவதற்கு அரசு செயல்பட வேண்டும். பல தேவைகளுக்குச் சர்க்கார் துறைத் தொழில்களிலிருந்து உற்பத்தியாகும் பொருள்களையும், ரயில்வே போக்குவரத்தையும் எதிர்பார்த்து ஆயிரக்கணக்கான தொழில்கள் இயங்க வேண்டியிருக்கின்றன. இவை அனைத்தும் தட்டுப்பாடின்றிக் கிடைக்கவும், சம சீரான விலையில் கிடைக்கவும் வகை செய்ய வேண்டும். இறக்குமதி செய்தே தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள வேண்டிய இனங்களிலும் கூட, விலைகளை, மான்யம் வழங்குவது போன்ற நடவடிக்கைகள் மூலம் ஏற்றத் தாழ்வின்றி நிலைக்கச் செய்தல் அவசியம். பருத்தி, கோதுமை, எண்ணெய் போன்ற இனங்கள் இந்த வகையில் முக்கிய

இடம் பெற வேண்டியிருக்கும். (3) சம்பள விகிதங்களும், கூலி விகிதங்களும், இதர பட்டுவாடா இனங்களும் ஒரு நிலையில் நிர்ணயம் செய்து சில காலத்துக்காவது அதே அளவில் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுவதும் அவசியமாகும். விலைவாசிகளின் உயர்வும் சம்பள — அலவன்ஸ் விகிதங்களும் ஒன்றொடொன்று இணைக்கப்பட்டிருப்பதால், விலைவாசிகளைக் கட்டுப்படுத்தி நிலைக்கச் செய்தால், சம்பள—அலவன்ஸ்களையும் கட்டுப்படுத்துதல் சாத்தியமாகும். (4) இப்போது அநாவசியமான பல இனங்களில் செய்யப்படும் வீண் செலவுகளை மத்திய அரசும், மாநில அரசாங்கங்களும் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆடம்பரத்துக்காகவும், கட்சி நலனுக்காகவும், தாராளமாகச் செலவு செய்யும் மனப்பான்மை சிக்கனத்துக்கு உகந்ததல்ல. வீண் செலவுகளைக் குறைப்பதன்மூலமே மிகக் கணிசமான அளவு செலவு குறையும் என்பது விஷயம் அறிந்தவர்களின் ஒருமித்த கருத்து.

நடவடிக்கைகள் பல துறைகளில் எடுக்கப்பட வேண்டியவை என்றாலும், எல்லாவற்றுக்கும் லட்சியம் ஒன்றே. விலைவாசி ஏற்றத்தைத் தடுக்க முடியாவிட்டாலும், இப்போதுள்ள நிலையில் கட்டுப்படுத்தவாவது வேண்டும். இது செய்யப்படும் என்ற நம்பிக்கை மக்களுக்கு ஏற்பட வேண்டும். இது எந்த அளவுக்கு வெற்றிகரமாக முடிகிறதோ, அந்த அளவுக்குத் திட்டத்தையும் வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்கலாம். இல்லாவிடில் மற்றத் திட்டங்களைப் போலவே, ஐந்தாவது திட்டமும் காகிதத் திட்டமாகத்தான் போகும்.



# செய்திகள் பல; சிந்தனைகள் சில....



## வேலைநிறுத்தம் வேண்டாம்!

ரயில்வேத் தொழிலாளர்களின் வேலைநிறுத்தப் போராட்டத்துக்குக் கண்டனம் தெரிவித்துத் தமிழ்நாட்டுப் புதுக் காங்கிரஸ் தலைவர் வி. ராமய்யா தலைமையில் சென்னையில் 8—5—74 அன்று காலை ஊர்வலம் நடைபெற்றது. இந்த ஊர்வலத்தில் ஏராளமான பேர் கலந்துகொண்டதாகத் தெரிகிறது.

'விலைவாசி குறைய வேலைக்குச் செல்லுங்கள்', 'ஏழைகளுக்கு வாழ்வளிக்க வேலைக்குச் செல்லுங்கள்', 'நாட்டில் வறுமையைப் போக்க வேலைக்குச் செல்லுங்கள்' போன்ற கோஷங்கள் ஊர்வலத்தின்போது எழுப்பப்பட்டனவாம்.

இது ஒரு நல்ல திருப்பம். எங்கேயாவது வேலைநிறுத்தம் என்றால் 'அது அநீதியாக நடப்பது' என்று தெரிந்தாலும் அதனைக் கண்டிப்பதற்கோ, எதிர்த்துக் குரல் கொடுப்பதற்கோ அச்சம் கொண்டிருந்த சூழ்நிலையில் தமிழகப் புதுக் காங்கிரஸ் நல்ல முறையில் வழிகாட்டியிருக்கிறது.

புதுக் காங்கிரஸ் தொழிலாளரின் வேலைநிறுத்த உரிமைக்குக் குறுக்கே நிற்கவில்லை. தேசம் இன்று பொருளாதாரச் சிக்கலில் அவதிப்படும்போது மக்களின் தொல்லைகளை அதிகப்படுத்தும் முறையில் — விலைவாசிகளை உயர்த்தும் முறையிலும், உணவுப் பஞ்சம் விளைவிக்கக் கூடியவாறும், தொழிற்சாலைகள் மூடக்கூடிய நிலைமை உண்டாக்கும் வகையிலும்—ஒரு வேலைநிறுத்தம் நடத்துவது, தேசபக்தியுள்ள தொழிலாளர்கள் செய்யும் பணியல்ல.

இதனை ரயில்வேத் தொழிலாளர்களுக்கு உணர்த்தும் வகையில் புதுக் காங்கிரஸ் நடத்திய ஊர்வலம், மக்களின் ஆதரவைப் பெற்றிருக்கிறது. புதுக் காங்கிரஸின் இந்தப் பணி நாளுக்கு நாள் வளர்ந்து, ஓர் ஐந்தாண்டு காலத்துக்கு எந்தத் தொழிற்கூடத்திலும் வேலைநிறுத்தம் நடக்காது என்ற நிலை உருவானால் நாட்டில் வறுமை ஒழிந்து சுபிட்சம் பெருகும்.

## பிரதமரின் ராஜினாமா

மேற்கு ஜெர்மன் பிரதமர் வில்லி பிராண்ட் தமது பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். வில்லி பிராண்ட் ராஜினாமாவில் இந்திய மக்கள் உய்த்து உணர வேண்டிய கருத்து தொக்கி நிற்பதாலேயே இதைக் குறிப்பிட விரும்புகிறோம்.

இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு ஜெர்மானிய நாடு இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டு, மேற்கு ஜெர்மனி ஜனநாயக நாடாகவும், கிழக்கு ஜெர்மனி ருஷ்யாவின் ஆதிக்கத்துக்குட்பட்ட கம்யூனிஸ்ட் நாடாகவும் பரிணமித்தது. இதனால் கிழக்கு ஜெர்மன் அரசுக்கும் மேற்கு ஜெர்மன் அரசுக்கும் பகையும் மாற்சர்யமும் நீண்ட நாட்களாகத்

தொடர்ந்து வந்தன. இரு கூறுகளைச் சேர்ந்த மக்கள் ஓர் இன மக்களாயினும் ஆட்சிகள், மாறுபட்ட கொள்கைகள் கொண்டனவாக இருந்தமையால் பல இன்னல்களுக்கு உள்ளாயினர். வில்லி பிராண்ட் பதவிக்கு வந்த பிறகுதான் இந்த இரு நாடுகளிடையே சமூக உறவு ஏற்பட்டது. கிழக்கு ஜெர்மனியைத் தனி நாடாக அங்கீகரித்து, அந்தச் சமூக உறவை நிலைநாட்டினர். ருஷ்யாவுடன் நேசப் பான்மையை வளர்த்தார். ஐரோப்பாவிலேயே ஓர் அரிய ராஜதந்திரி என்று புகழ் பெற்றார்.

அப்படிப்பட்டவரின் நெருங்கிய உதவியாளராகப் பணியாற்றி வந்த கிலாமி கம்யூனிஸ்ட் ஒற்றர் என்று மேற்கு ஜெர்மனியின் போலீஸ் துறை சந்தேகத்துக்கிடமின்றிக் கண்டுபிடித்து விட்டது. ஏப்ரல் 24ம் தேதி போலீஸ் அவரைக் கைது செய்தது.

வில்லி பிராண்டுக்கு இப்படித் தமது அந்தரங்கத் துணையாளர் ஒரு துரோகி என்பது தெரியாது. எனினும் போலீஸ், 'நன்கு கப் ட்ரயிற்சி பெற்ற ஒற்றன்' என்று சொன்ன பிறகு தாம் இத்தனை நாட்களும் அவரைப் பதவியில் வைத்திருந்ததற்கு முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு பிரதமர் பதவியை ராஜிநாமாச் செய்து விட்டார்.

கம்யூனிஸ்ட் நாடுகளுடன் நேச உறவு கொள்வது வேறு, அரசாங்கத்துக்குள்ளேயே வைத்துக் கொள்வது வேறு என்ற நியதியை வில்லி பிராண்ட் உணர்ந்ததன் விளைவாகத் தமது 'பதவியை ராஜினாமாச் செய்தார். ஆனால் நம் நாட்டில் நடைபெறுவதோ அனைவரும் அறிந்த விஷயமே!

## சொல்லும் செயலும்

**உ**ணவுப் பொருள்கள் கொண்ட பாக்கெட்டுகளின் மீதும் டின்களின் மீதும், ''நூற்றுக்கு நூறு சுத்தமானது'' என்ற வாசகம் அச்சிடப்பட்டிருந்ததால் அமெரிக்க நாட்டு இல்லத்தரசிகள் அவற்றைப் பரிபூரண நம்பிக்கையுடன் வாங்குகின்றனர். ஆனால் இத்தகைய அறிவிப்பு இனிமேல் காணப்பட மாட்டாது என்று தெரிய வருகிறது. ஏனெனில், உணவுப் பொருள் பாக்கெட்டுகள் மீது இவ்வாறு அச்சிடுவதைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளை மேற்கொள்ள அமெரிக்க நாட்டு விவசாய இலாகா யோசனை தெரிவித்துள்ளதாம். காரணம் மிகவும் விநோதமானது — அமெரிக்காவில் 'நூற்றுக்கு நூறு சுத்தமான உணவு' என்று எதுவுமே இல்லை என்பதுதான்.

எல்லா உணவுப் பொருள்களிலும் அவற்றின் ஊட்டச் சத்துத் தன்மைகள் பலவிதத்திலும் பாதிக்கப்பட்டு விடுகின்றன; அத்துடன் அவற்றின் இயற்கையான மணமும் ருசியும் பறிபோய் விடுகின்றன. இந்தகைய பாதிப்புப் பெரிதும் ஏற்படுவதற்குக் காரணமாயிருப்பது, நவநாகரிக மோஸ்தரில் எந்த உணவுப் பண்டத்தையும் கவர்ச்சியான வண்ணங்களில் உருமாற்றி விடுவதுதான். மேலும் கவர்ச்சியான வண்ணங்கள் பதனப்படுத்தும் போது பாதிக்கப்படாமல் இருக்க, பலவிதத்திலும் பாதுகாப்பு எடுத்துக் கொள்ளப்படுகிறது. சிறந்த விஞ்ஞான முறைகளை அநுசரித்தாலும் இவ்விஷயத்தில் பாதிப்பு ஓரளவு ஏற்படுவது உண்மைதான் என்று ''நியூயார்க் டைம்ஸ்'' என்ற பத்திரிகை கூறுகிறது.

அமெரிக்காவிலேயே இப்படியென்றால், நம் நாட்டு உணவுப் பண்டங்கள் நிலைபற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

சர்க்கார் உத்தரவாதம் அளிக்கும் 'அக்மார்க்' எண்ணெய்களிலும் பண்டங்களிலும் கலப்படம் காணப்படுகின்றன என்று பரவலாகப் புகார்கள் இருந்து வருவது யாவரும் அறிந்ததே!

நாம் நேர்மையைப் பற்றி அதிகம் பேசுகின்றோம்; மேனாட்டினர் பேசாமல் நடந்து கொள்கின்றனர்.

### ராஜாஜி சிந்தனை

மனைவி கணவனிடம் நடந்து கொள்ள வேண்டிய முறையைப் பற்றி நம்முடைய புராண இதிகாசங்களில் விரிவான உபதேசம் இருக்கிறது. வேண்டிய அளவும் அதற்கு மேலேயும்கூட இருக்கிறது. ஆனால் அதைத் திருப்பிப் போட்டுக் காட்டவில்லை. பண்பட்ட கணவன் மனைவியிடம் நடந்து கொள்ள வேண்டியதைப் பற்றி நமக்குப் படிப்புப் போதவே போதாது. இதைப் பற்றி எழுதப் புகுந்தால் அது ஒரு தனிப் புத்தகமாக முடியும். பொதுவாக ஒரு சூத்திரம் சொல்லுகிறேன். கல்யாணம் ஆகி விட்டது. இனி இந்தப் பெண் என்னுடைய சொத்து. அவளுடைய பணிவிடையைக் கட்டாய வரி வசூலைப் போல் நான் பெறலாம் என்று எண்ணுதல் கூடாது. இரு நண்பர்கள் ஒருவரை யொருவர் மதித்து, ஒவ்வொரு நிமிஷமும் கவனத்துடன் நடந்து கொண்டு, அன்பைச் சுயேச்சைப் பொருளாக எப்படி வளர்த்து வருகிறார்களோ, அப்படியே கணவன் மனைவியிடம் மரியாதையாகவும் அன்பாகவும் நடந்து கொள்ள வேண்டும். 'அவள் எப்படியும் மனைவிதான், எப்போதுமே மனைவி, என்னைவிட்டுப் போய்விட முடியுமா ? வீட்டிலுமா கவனமும் கவலையும்?' இவ்வாறு எண்ணி மனைவியை அலட்சியமாகவோ, அகௌரவமாகவோ நடத்தக் கூடாது.

# அம்பாளை உபாசிப்பதன் பலன்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் [illegible]

பெண்களுக்குப் பதியேதான் குரு. எனவே குரு பக்தியும் பதிபக்தியும் அவர்களுக்கு ஒன்றேதான். பதிவிரதா சிரோமணியான அம்பாளை ஆராதிக்கிற பெண்களுக்கு அவள் தீர்க்க ஸௌமங்கல்யத்தைத் தருகிறாள். ஸ்ரீமத் பாகவதத்தில் கோபிகா ஸ்திரீகள் மார்கழி மாதம் முழுதும் தினம் அதிகாலையில் ஆற்றங்கரையில் அம்பாளைப் பூஜித்து ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை அடைந்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. பிற்பாடு ருக்மிணியும் அம்பாளை ஆராதனை செய்தே பகவானைப் பர்த்தாவாக அடைந்தாள் என்று வருகிறது. தமிழ் நாட்டிலும் சங்க காலத்திலேயே 'அம்பாவாடல்' என்கிற பேரில் கன்னிப் பெண்கள் கல்யாணமாவதற்கு அம்பாளை வழிபட்டார்கள் என்று தெரிகிறது. இதற்குப் 'பாவை நோன்பு' என்றே பேர் இருந்திருக்கிறது. இன்னமும் கன்னிப் பெண்கள் கல்யாணமாவதற்காகக் கௌரி பூஜை பண்ணுகிறார்கள்.

எப்பேர்ப்பட்ட பர்த்தா வந்தாலும் அவனையே தெய்வமாகப் பாவித்துத் தன்னைச் சரணாகதி செய்துவிட வேண்டும் என்பதுதான் உத்தம பதிவிரதா லக்ஷணம். ஏதோ ஓரிடத்தில் மனசைப் பரிபூரணமாக அர்ப்பணம் பண்ணிவிட வேண்டும்; பிறகு அதை மாற்றக் கூடாது என்பதுதான் முக்கியம். அந்த ஓரிடம் உத்தம வஸ்துவாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. அதனிடத்தில் நம் மனசைப் பூரணமாகச் சமர்ப்பித்துவிட்டால், அப்புறம் நமக்கென்று தனியாக எதுவும் செய்துகொள்ள வேண்டும் என்பதே இல்லாமல் போய்விடுகிறது. இதனால் மோக்ஷ மார்க்கத்துக்கு வாசலைத் திறந்துவிட்டாற் போலாகிறது. நாம் சரணாகதி பண்ணுவதுதான் இதில் முக்கியம்; அது எந்தப் பாத்திரத்தைக் குறித்தது என்பது முக்கியமல்ல. ஒரு ஸ்திரீ எப்படிப்பட்ட புருஷன் கிடைத்தாலும் அவனிடம் சரணாகதி செய்து, பதிவிரதையாக இருந்து, அவனையே பரமேச்வரனாக நினைத்து விட்டாளானால், நிச்சயமாக அந்தப் பரமேச்வரன் இந்தப் புருஷன் மூலமே அவளுக்கு அனுக்கிரகம் பண்ணிவிடுவார். மகா குரூபமும், விபரீத குணமும் படைத்த பதியிடம் அதிவிசுவாசத்தோடு இருந்த நளாயனிக்குச் சூரியனையே உதிக்காமல் நிறுத்தி வைக்கிற சக்தி உண்டாயிற்று. பதிவிரதை பூஜிக்கிற அந்தப் பதிக்கு ஒரு சக்தியும் இராது; பரமேச்வராம்சம் லவலேசம்கூட அவனுக்கு இருப்பதாகத் தெரியாது. ஆனால் அவனை ஈச்வரனாக மதிக்கிற இவளுக்குச் சகல சக்தியும் வந்து விடுகிறது. குரூபியிடமும், குணஹீனனிடமும் கூடப் பதிபக்தி பாராட்டுவதுதான் விசேஷம். ''அவர் இயற்கையாகவே நல்லவராக இருந்தால் நம் தியாகத்தைக் காட்ட வழி ஏதுமில்லை. அதற்காகவே பகவான் இப்படிக் குணஹீனனாக நமக்குக் கொடுத்திருக்கிறார்'' என்று நினைக்க வேண்டும். இப்படிப்பட்ட பதியை அநுசரிப்பதால் ஏற்படுகிற அவமானமும் கொஞ்ச காலம்தான் இருக்கும். 'தனியாக நமக்கென்று மான அவமானம் என்ன இருக்கிறது?' என்று இவள் இருக்க வேண்டும். மொத்தத்தில் விஷயம், 'தனக்காக ஒன்றைப் பண்ணிக் கொள்வது' என்பது அடிபட்டுப் போனால், அப்புறம் மோக்ஷம் சமீபம்தான்.

குரு விஷயமும் இப்படித்தான். நல்லவர் என்று நினைத்துத்தான் ஒருவரைக் குருவாக வரிக்கிறோம். பிற்பாடு அப்படியில்லை என்று தெரிந்தாலும்கூட, விடாமல் சுசுரூஷை செய்தால் நம் மனசு சுத்தமாகிவிடும் என்று எனக்குத் தோன்றுகிறது. 'எல்லாமாக ஆகியுள்ள பரமேச்வரன்தான் இங்கே இப்படி ஆகியிருக்கிறார்' என்கிற பாவத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும். தகாத இடம் என்று தோன்றுகிற போதுகூட சுசுரூஷையைக் குறைக்காமலிருந்தால்தான் ஜாஸ்தி பலன் என்று தோன்றுகிறது. நன்றாக இருக்கிற ஒன்றிடம் பிரியம் வைப்பதில் விசேஷம் என்ன இருக்கிறது? கெட்டதிடமும் அதே பிரியத்தை வைத்துவிட்டால், நம் பிரியத்தாலேயே கெட்டதும்கூட நல்லதாகலாம் — கோரமான ஈச்வரன் கூட அம்பாளால் மங்கள ஸ்வரூபியான மாதிரி.

குரு ஸ்வரூபமாக வருகிறவளும் அவள்தான். இந்த மாயாலோகம் அவளால்தான் நடக்கிறது. அதிலிருந்து கைதூக்கி விடுவதற்காக அவளே குருவாக வருகிறாள். குண்டலினி யோக சாதகர்கள் தங்கள் சிரஸின் உச்சியில் பிராண சக்தியைக் கொண்டு வந்து அங்கே பூரண சந்திரனில் அம்பாள் பாதத்தைத் தரிசிக்கிறார்கள்; இதையே குரு பாதுகை என்றும் சொல்கிறார்கள். காளிதாஸனும், ''தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்'' 'ஆசாரிய வடிவில் தன் மகிமையைக் காட்டுகிறவள்' என்கிறார்.

'ஈச்வரன் மயானத்தில் வசிக்கிறாரா, வசிக்கட்டும்; பேய் பிசாசுகளோடு கூத்தடிக்கிறாரா, அடிக்கட்டும்; ஸம்ஹார தாண்டவம் பண்ணுகிறாரா, பண்ணட்டும்; ஊர் ஊராகப் பிச்சை எடுக்கிறாரா, எடுக்கட்டும் — அவர் எப்படியிருந்தாலும் அவருக்கே இருதயத்தை அர்ப்பணம் செய்வேன்' என்று தீவிரமாக இருந்த அம்பாள்தான் இப்படிப்பட்ட பதிபக்தியை, குருபக்தியை அனுக்கிரகம் செய்கிறாள்.

## அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
## அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
## தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...

பட்டுப் போன்ற டால்க்... அன்பைப்போல
மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி
அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில்
ஆழ்த்தும் அருமையான புது நறுமணம்
கொண்டது. அதுவே வெய்ல் ஆஃப் லவ்.
ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத்
தாராளமாக மேனியெங்கும் தூவிக்
கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே
பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம்
நீண்ட நேரம் உங்களைத் தழுவி,
உங்களைச் சுற்றிலும் கமகமவென
வீசிக் கொண்டிருக்கும். வெய்ல்
ஆஃப் லவ் உங்களை அலங்கரிக்-
கட்டும். ஹேலோ மட்டுமே
அளிக்கும் வாசமுள்ள
அன்புத்திரை அது.

ஹேலோ வெய்ல் ஆஃப்
லவ் டால்க் வாசமுள்ள
அன்புத்திரை...
அன்பைப் போல
மிருதுவானது.

அவளுக்கு உகந்தது

# ஹேலோ

வெய்ல் ஆஃப் லவ்
டால்க்




HT.G.I.TH (R)



# வெய்யிலோ வெய்யில்!

சீதா

"ஹாஸ்யமெல்லாம் நிஜமாயிண்டிருக்கு" என்றார் சங்கரய்யர் பேப்பரை உதறிக் கொண்டே.

"என்ன ஹாஸ்யம்பா!" என்று கேட்டாள் சாரு.

"பழைய ஹாஸ்யத் துணுக்குப் படிச்சிருப்பாயே! — கல்கத்தா மெயில் பிளாட்பாரத்துக்குள் நுழைந்ததாம். பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த பிரயாணி, 'தேவலையே, சரியான, குறித்த நேரத்துக்கு வந்து விட்டதே' என்று வியந்துபோய்ச் சொன்னானும். பக்கத்திலிருந்தவர் 'இது நேற்று வந்திருக்க வேண்டிய வண்டி.' என்றாராம். அம்மாதிரி தான் எப்பொழுதோ புறப்பட்ட வண்டிகள் எப்பொழுதோ வந்து சேருகின்றன" என்றார் சங்கரய்யர்.

"ஸ்டிரைக் செய்வோம் என்று பயமுறுத்திக்கொண்டிருக்கும் இந்த வேளையில் ரயில் நிர்வாகத்தினர் ரயிலை ஓட்டியே தீருவோம் என்று தைரியமாக ரயிலை விடுகிறார்களே, அதற்கு அவர்களைப் பாராட்ட வேண்டும்" என்றான் வேணு.

இந்தச் சமயத்தில் ஹேமா உள்ளே நுழைந்தாள். எல்லோரும் ஆச்சரியமாக அவளைப் பார்த்தார்கள்.

"என்னமது. கோடைக்குப் போகப் போகிறேன், ஊட்டிக்குப் போகப் போகிறேன் என்று சொல்லி விட்டுப் போனாயே! இப்ப இங்கு வந்து நிக்கறே!" என்றான்.

"இந்த ரயில் ஸ்டிரைக் இருக்கிற லட்சணத்திலே அப்பா ஊரை விட்டுப் போறது சரியில்லே என்று கோடைத் திட்டத்தை ரத்து செய்து விட்டார். அதனாலே மெட்ராஸ் வெய்யிலிலே இந்த வருஷம் வறுபட வேண்டியதுதான்" என்று அலுத்துக் கொண்டாள் ஹேமா.

"வேண்டாம்மா, மெட்ராஸிலேயே ஊட்டியின் குளிர்ச்சியையும் கோடைக்கானலின் குளிர்ச்சியையும் அனுபவித்து விடலாம்! இதற்கு ஒரு சுலபமான வழியிருக்கு" என்றாள் சாரு.



மைவிழி மகளிர்



"அது என்ன?" என்று ஆவலுடன் கேட்டாள் ஹேமா.

"நல்ல வெயில் நேரத்தில் மாட்டினி ஷோவுக்கு ஏர் கண்டிஷன் பண்ணிய தியேட்டருக்குப் போய் உட்கார்ந்து விட்டால் தீர்ந்தது" என்றாள் சாரு.

"சரிதான். மின்சாரப் பஞ்சமிருக்கிற இந்த நாளையிலே உனக்கு 'ஏர்கண்டிஷன் பிளாண்ட்' தியேட்டரிலே போடப் போறானா? அறுபது சதவிகிதம் மின்சாரக் கட் ஏற்பட்டிருக்கச்சே மாட்டினி ஷோவையே கட் பண்ணினாலும் ஆச்சரியப்படறதுக்கில்லே. இந்த லட்சணத்திலே சினிமாவுக்குப் போய் ஊட்டியையும் கோடைக்கானலேயும் அனுபவிக்கப் போறுளாம்!" என்றான் சுந்தர்.

"ஐய்யய்யோ! மாட்டினி ஷோவே இருக்காதா? அப்ப இந்தக் கோடை விடுமுறையை எப்படிக் கழிக்கிறதாம்!" என்றாள் ஹேமா.

"சினிமா எங்கே, நாடகம் எங்கேன்னு அலைஞ்சாத்தான் விடுமுறையைக் கழிச்சாப் போலேயா?" என்றாள் அத்தை.

''பின்னே? இல்லேன்னு வீட்டிலேயே உட்கார்ந்திருந்தா 'போர்' அடிக்குமே அத்தை!'' என்றாள் சாரு.

''அந்த நாள்லே நாங்கள்ளாம் கோடை விடுமுறை வந்துவிட்டதுன்னு வெய்யில் நேரத்திலே வீட்டுக்குள்ளேயே உட்கார்ந்து பல்லாங்குழி, தாயக்கட்டம், ஒற்றையா, ரெட்டையா, அம்மானை – இப்படி ஏதாகிலும் ஆடுவோம். வெய்யில் தாழ வீட்டு வாசலில் கோடு கிழிச்சுப் பாண்டி ஆடுவோம். தட்டாமாலை சுத்துவோம்.''

''அம்மா, இந்தக் காலத்துப் பெண்கள் இந்த விளையாட்டெல்லாம் விளையாட மாட்டா. பிங்பாங், ஷட்டில்காக் என்று இந்த வகை ஆட்டம்தான் பிடிக்கும்!''

''பேரே விசித்திரமா இருக்கே?'' என்றாள் அத்தை.

''பேர் விசித்திரமாக இருந்தாலும் பொழுது போகலேன்னு சினிமாவுக்குப் போறதைவிட இது எவ்வளவோ தேவலை'' என்றாள் அன்னபூர்ணம்மாள்.

''அது என்ன சினிமா மேலே உனக்கு அவ்வளவு துவேஷம்?'' என்றான் சுந்தர்.

''தெருவிலே ஒட்டியிருக்கிற சினிமா போஸ்டர் ஒண்ணாவது பார்க்கும்படியா இருக்கா? இந்தக் காட்சிகள்தானே உள்ளேயும் இருக்கும்! இந்த ஆபாசங்களைப் பார்க்கப் போக வேண்டுமா, என்ன?'' என்றாள் அன்னபூர்ணம்மாள்.

''போஸ்டரிலே இருக்கிற காட்சி படங்களிலே இருக்கிறதில்லே அம்மா!'' என்றாள் சாரு, குரலில் ஏக்கம் தொனிக்க.

''பார்த்தியா அம்மா அவள் வருத்தத்தை'' என்று சீண்டினான் சுந்தர்.

''மொத்தத்திலே இந்தக் காலத்திலே எந்தக் காட்சிதான் சினிமாவிலே காட்டறது என்கிற விவஸ்தை ஒன்றும் கிடையாது!'' என்று அன்னபூர்ணம்மாள் எரிந்து விழுந்தாள்.

''காதல் காட்சி — கும் கும் குத்துச் சண்டைக் காட்சிகள் தவிர வேறு இருப்பதில்லை. இதனாலேயே நம்ம தேசத்திலே ஒழுக்கம் கெட்டு வருகிறது என்று பலர் அபிப்பிராயப் படுகிறார்கள்!'' என்றார் சங்கரய்யர்.

''ஒழுக்கம் என்று எடுத்துக் கொண்டால் இந்தத் தேசத்திலே எந்தத் துறையிலே கெடலே?'' என்று பிரமாதமாக ஒரு போடு போட்டான் வேணு.

எல்லோரும் அதிர்ந்து விட்டார்கள். ''என்னடா சொல்றே?'' என்றாள் அன்னபூர்ணம்மாள்.

''ஆமாம், உயிர் கொடுக்கிற மருந்து தயாரிப்பாளர்கள் கலப்படம் செய்ததால் தானே கான்பூர் ஆஸ்பத்திரியிலே பல பேர் இறந்திருக்கிறார்கள்'' என்றான் வேணு.

''இப்படித் தரமற்ற மருந்து தயாரிக்கும் கம்பெனிகள் உ. பி. யில் இருக்கின்றனவாம். பிரபல பம்பாய் மருந்துக் கம்பெனிகள் தயார் செய்யும் மருந்துகள் வாங்கி ஆஸ்பத்திரிகளில் வைக்காமல் இந்தப் போலி மருந்துக் கம்பெனிகள் தயாரிக்கும் மருந்துகளை உ. பி. யில் பல ஆஸ்பத்திரிகளில் வைத்திருக்கிறார்கள். இத்தகைய நடைமுறைக்குப் பல டாக்டர்களே உடந்தை என்று உ. பி. பத்திரிகைகள் எழுதுகின்றன. படித்த டாக்டர்களே இப்படி ஒழுக்கம் தவறி உயிருக்கு ஆபத்து விளைவிக்கவல்ல மருந்துகளைத் தயாரிக்கும் போலிக் கம்பெனிகளுக்கும் திருட்டுத்தனத்துக்கும் கலப்படத்துக்கும் உடந்தையாளர்களானால் இந்தத் தேசம் எங்கே போய்க் கொண்டிருக்கிறது? நமக்கு என்ன ஆகிவிட்டது? என்ற கவலையாக இருக்கிறது'' என்று ஒரு பிரசங்கமாரியே பொழிந்து விட்டான் சுந்தர்.

ஹேமாவும் சாருவும் கைதட்டி ஆர்ப்பரித்தனர்.

''சாரு! ஹேமா! சுந்தர் சொன்னதினாலே நீங்கள் சிரிக்கிறீர்கள். ஆனால் அவன் சொன்னது அவ்வளவும் வாஸ்தவம். தேசத்திலே பெரியவர்களுக்கு இதே கவலைதான். நாட்டிலே தார்மீக உணர்ச்சியைத் தட்டி எழுப்பணும் என்பதற்காகத்தான் ஜெயப்பிரகாஷ் நாராயண் போன்றவர்கள் முயற்சி செய்து வருகிறார்கள்!'' என்றார் சங்கரய்யர்.

''நம்ம தேசத்திலே யார் யாரோ வந்து ஆண்டார்கள் - முஸ்லிம்கள், ஆண்டார்கள், வெள்ளைக்காரன் வந்து ஆண்டான். யார் வந்து எப்படி ஆண்டாலும் நம்ம தேசத்தில் பெண்கள் தங்கள் தர்மத்தைக் கைவிடாமப் பதினெட்டு முழப் புடவையைக் கட்டிக் கொண்டு பூஜை, புனஸ்காரம், விரதங்கள் பண்டிகைகள் எல்லாம் ஒழுங்காக அனுஷ்டித்துக் கொண்டு வந்தா. அதனால் தர்மம் காப்பாற்றப்பட்டு வந்தது. இந்தக் காலத்துப் பெண்கள் புருஷப் பசங்களைப் போல் பாண்டும் சட்டையும் போட்டுக் கொண்டு கூத்தடிக்கிறதுகள். ஜெய மங்கள ஸ்தோத்திரம் வராது. சினிமாப் பாட்டைச் சதா முணு முணுத்துக் கொண்டிருக்கிறதுகள்.. இதைப் பார்த்தால்தான் பயமாக இருக்கு'' என்றாள் அத்தை அகிலாண்டம்மாள்.

''அகிலாண்டம்! பெல் பாட்டம் போட்டாலும் லிப்ஸ்டிக் போட்டாலும் கடைசியிலே நம்ம குழந்தைகள் நம்ம தர்மத்துக்குத்தான் வந்து சேருவா'' என்றார் சங்கரய்யர்.

''ஏன், உங்கண்ணா அந்தக் காலத்திலே அவர் போட்ட பாண்ட் சூட் அட்டகாசம் பார்த்தால் இப்பத்தான் இங்கிலாந்திலே யிருந்து கப்பலில் வந்து இறங்கியிருக்காப் பலே தோன்றும். எப்பப் பார்த்தாலும் வாயிலே சிகரெட். அப்படி யிருந்தவர் இன்று இப்ப அவரைப் பார்க்கிறவா யாராவது நம்புவார்களோ! உச்சிக் குடுமி என்ன, பட்டை பட்டை விபூதி என்ன, திரிகால சந்தியா வந்தனம் என்ன? வைதீகக் கட்டுப்பெட்டியாவன்னா மாறிட்டார்?'' என்றாள் அம்மா.

''அதுதாண்டி நம்ம சநாதன தர்மத்தின் விசேஷம். இந்தப் பெண்களும் நாலு வருஷம் கழிச்சுப் பார். உன்னைவிடக் கட்டுப்பெட்டியா மாறிவிடுவா!'' என்றார் சங்கரய்யர்.

சாருவும் ஹேமாவும் இதைக் கேட்டுத் திருதிரு வென்று விழித்தனர்.

# ஷேவர் ஸ்விஷ்

விமானக் கொள்ளையரை விரட்டியடிக்கிறான்




**ஒவ்வொரு முறையும் இதே கதை: ஸ்விஷ் க்ஷவரம் செய்து கொள்பவரை மிஞ்சுவதற்கில்லை** ஆனால் நீங்களும் பங்கு பெறலாம்

mcm/ci/25a tam

''பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்...''



# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!




பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக் கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய் நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி நவீன பராமரிப்பு முறையில் உங்கள் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது; மற்றும் வாய் நாற்றத்தையும் உடனே நிறுத்துகிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக் கணக்கில் வரும்!**



...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP.G.21 TM



## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

# "கள்வரோ நீர்!"

மறு நாள் மாலை நேரத்தில் மண்டபப்பட்டுக் கிராமத்துச் சிவன் கோயில் கண்கொள்ளாக் காட்சி அளித்துக் கொண்டிருந்தது. கோயிலின் முன் கோபுர வாசலைப் பசுமையான வாழை மரங்களும், மகர தோரணங்களும், திரைச் சீலைகளும் அலங்கரித்தன.

உள்ளே அர்த்த மண்டபத்தையும் வெளிக் கோபுரத்தையும் சேர்த்துப் பிராகாரத்தில் விஸ்தாரமான பந்தல் போட்டிருந்தார்கள். பந்தல் முனைகளில் வரிசை வரிசையாகத் தந்த வர்ணமுள்ள இளந் தென்னங் குருத்துத் தோரணங்களும், அவற்றின் இடையிடையே செந்தாமரை மொட்டுக்களும் தொங்கிக் கொண்டிருந்தன.

அந்த நாளில் தமிழ் நாட்டில் நீர்வளமுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் தாமரைக் குளம் உண்டு. குளத்திலே தண்ணீர் இருப்பதே தெரியாதவண்ணம் தாமரை இலைகளும் மலர்களும் மொட்டுக்களும் நிறைந்திருக்கும். எனவே, கோயில் விக்கிரகங்களுக்கு வேறு அபூர்வ புஷ்பங்களைச் சாத்திவிட்டுத் தாமரை மொட்டுக்களையும் மலர்களையும் கோயிலின் அலங்காரத்துக்கு உபயோகப் படுத்துவார்கள்.

இவ்விதம் அமோகமாக அலங்கரிக்கப்பட்டிருந்த கோயிலில் அஸ்தமிப்பதற்கு முன்னால் ஊர் ஜனங்கள் எல்லோரும் வந்து கூடிவிட்டார்கள். ஸ்திரீகள், குழந்தைகள் ஒருவரும் மிச்சமில்லாமல் வந்து அவரவர்களும் போட்டியிட்டு முன்னால் இடம் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தார்கள்.

சூரியன் அஸ்தமித்ததும் நூற்றுக் கணக்கான அகல் விளக்குகள் ஏற்றப்பட்டு ஆலயம் ஒளிமயமாக விளங்கிற்று. அதே சமயத்தில் சிவகாமி தேவியின் திவ்ய நடனத்தைப் பார்ப்பதற்காகவே விஜயம் செய்கிறவனைப் போல் பூரண சந்திரனும் உதயமானான்.

ஆயனரும் சிவகாமியும் கோயிலின் கோபுர வாசலுக்குள்ளே பிரவேசித்த

# சிவகாமியின் சபதம்



தும் கூட்டத்தில் கலகலப்பு உண்டாயிற்று.

பந்தலுக்குத் தென்புறத்தில் அமைந்திருந்த அரங்க மேடையிலே வந்து சிவகாமி நின்றதும் கூட்டத்தில் நிசப்தம். ஸ்திரீகளும் பேச்சை நிறுத்தினார்கள். அழுத குழந்தைகளும் வாய் மூடின.

அந்த மண்டபப்பட்டுக் கிராமத்து ஜனங்கள் அதுவரையில் அம்மாதிரி கண் கூசும்படியான திவ்ய சௌந்தரியத்தைக் கண்டதில்லை.

சிவகாமியின் நடன அலங்காரமும் அணிபணிகளும் அவளுடைய முகத்தில் அப்போது பிரகாசித்த தெய்விகக் களையும் கிளர்ச்சியும் பார்த்தவர்களைத் திகைக்கச் செய்தன.

ஆரம்பத் திகைப்பு ஒருவாறு மாறியதும் ஒருவருக்கொருவர் தங்களுடைய வியப்பைத் தெரிவித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

''தேவலோகத்து நடன மாதர்களான அரம்பை, ஊர்வசி முதலியவர்கள் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும்!'' என்றார் ஒருவர்.

''ஒருநாளும் இல்லை. அவர்கள் இவ்வளவு அழகாக ஒருநாளும் இருந்திருக்க முடியாது!'' என்றார் இன்னொருவர்.

''இந்தப் பெண்ணுடனே அந்தத் தேவலோகக் கணிகையரை ஒப்பிடுவது பிசகு. தில்லையம்பலத்தில் நடராஜப் பெருமானுக்குப் போட்டியாக நடனமாடிய சிவகாமி தேவியேதான் இப்படி அவதாரம் எடுத்து வந்திருக்கிறாள்'' என்று ஒரு பக்தர் கூறினார்.

''இல்லாமலா, நாவுக்கரசர் பெருமான் அவ்வளவு பாராட்டினார்!'' என்று இன்னொரு பக்தர் பரவசமாகச் சொன்னார்.

**ப**ளிச்சென்று சொல்லி வைத்தாற்போல் சபையிலே மறுபடியும் பரிபூரண நிசப்தம் ஏற்பட்டது. சிவகாமி நடனமாட ஆரம்பித்து விட்டாள்!

ஆயனரின் கர தாளத்துக்கும் அவர் பாடிய ஸ்வரஜதிகளுக்கும் இணங்கச் சிவகாமி ஆடினாள்!

உள்ளூர் மத்தள வித்வான் ஒருவர் வாழ்நாளில் என்றுமறியாத உற்சாகத்துடன் மத்தளம் வாசித்தார்.

'கும் கும்' என்னும் மத்தளச் சத்தத்தோடு கலந்து பாதச் சதங்கை ஒலி 'கல் கல்' என்று சப்திக்கச் சிவகாமி நிருத்தம் ஆடினாள்.

அந்த நிருத்தத்தில் மின்னலின் விரைவு காணப்பட்டது; மான் குட்டியின் துள்ளல் தோன்றியது; கானமயிலின் சாயல் விளங்கியது.

சில சமயம் சிவகாமி பூமியிலே நின்று ஆடினாள்; சில சமயம் வான மண்டலத்துக்குச் சென்று வெண்மதியின் கிரணங்களில் ஆடினாள். சில சமயம் நட்சத்திர மண்டலத்துக்கே சென்று விண்மீன்களின் மத்தியில் பம்பரம் போலச் சுழன்று ஆடினாள்.

சிவகாமி அவ்விதம் சுழன்றாடியபோது பார்த்துக் கொண்டிருந்தவர்களின் கண்கள் சுழன்றன; அரங்க மேடையும் அகல் விளக்குகளும் சுழன்றன; கோயில் சுழன்றது; கோபுரங்கள் சுழன்றன; தூங்கானை மாடத்துத் தங்க ஸ்தூபி சுழன்றது; வானமும் பூமியும் கீழ் மேலாகச் சுழன்றன; சந்திரனும் நட்சத்திர மண்டலங்களும் சுழன்று சுழன்று வந்தன.

இவ்விதம் வெவ்வேறு காலப் பிரமாணங்களில், வெவ்வேறு ஜதிகளில், விதவிதமான நிருத்த வகைகளை ஆடிச் சபையோரைக் கிறுகிறுக்க அடித்த பிறகு சிவகாமி சிறிது நேரம் சிரம பரிகாரம் செய்து கொள்வதற்காக மேடைக்குப் பின்புறம் சென்றாள். அப்போது சபையில் பிரமாதமான ஆரவாரம் எழுந்தது.

ஆயனரின் அரண்ய வீட்டில் எட்டு மாதம் இருந்தும் சிவகாமியின் நடனத்தைப் பார்த்தறியாதவனான குண்டோதரனும் மற்றச் சபையினரைப்போலவே பரவசமடைந்து போயிருந்தான்.





நடனம் நின்ற பிறகும் அவன் தன்னை மறந்த நிலையிலேயே இருந்தபடியால், பக்கத்திலிருந்த மாமல்லரைப் பார்த்து, ''பிரபு...'' என்று ஆரம்பித்தான். மாமல்லரும் சிவகாமியின் நடனத்தில் பூரணமாய் ஈடுபட்டிருந்தாராயினும், அவர் தம்மையும் தமது சுற்றுப்புறத்தையும் மறந்துவிடவில்லை. எனவே குண்டோதரன் 'பிரபு' என்றதும் அவர் அவனை ஒரு குலுக்குக் குலுக்கினார். அதற்குள் பக்கத்திலிருந்த ஐந்தாறு பேரின் கவனம் குண்டோதரன் மேல் விழுந்திருந்தது. மாமல்லரின் குலுக்கலினால் தனது நினைவு அடைந்த குண்டோதரன் சுவாமி சந்நிதியை நோக்கி, ''பிரபு! இந்தத் தெய்விக நடனம் உனக்குத்தான் பிரீதி!'' என்று பக்திப் பரவசம் ததும்பிய குரலில் கூறி முடித்தான். ''சந்தேகம் என்ன? இறைவனுக்குத்தான் பிரீதி!'' என்று பக்கத்திலிருந்தவர்களும் ஆமோதித்தார்கள்.

சிவகாமி மீண்டும் அரங்க மேடைக்கு வந்து அபிநயம் பிடிக்கத் தொடங்கினாள். திருநாவுக்கரசர் பெருமானின்,

**''வடிவேறு திரிசூலம் தோன்றும்**
**தோன்றும்**
**வளர்சடைமேல் இளமதியம்**
**தோன்றும் தோன்றும்''**

என்னும் பாடலுக்குச் சிவகாமி அபிநயம் பிடித்தபோது, சபையோர் சாக்ஷாத் சிவபெருமானையே நேருக்கு நேர் தரிசித்தவர்களைப் போல் ஆனந்த வாரிதியில் மூழ்கினார்கள். பின்னர், ''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்'' என்னும் திருப்பாடலுக்குச் சிவகாமி அபிநயம் பிடிப்பாள் என்று எல்லாரும் எதிர்பார்த்ததற்கு மாறாகச் சிவகாமி பின்வரும் பாடலைப் பாடி அபிநயம் பிடிக்கத் தொடங்கினாள்.

**''வெள்ளநீர்ச் சடையனார்தாம்**
**வினவுவார் போலவந்தென்**
**உள்ளமே புகுந்து நின்றார்க்கு**
**உறங்குநான் புடைகள் போந்து**
**கள்ளரோ புகுந்தீர் என்னக்**
**கலந்துதான் நோக்கிநக்கு**
**வெள்ளரோம் என்று நின்றார்**
**விளங்கிளம் பிறையனாரே!''**

ஓர் அறியாப் பெண்ணின் உள்ளமாகிய இல்லத்தினுள்ளே வெள்ள நீர்ச் சடையரைாகிய சிவபெருமான் ஏதோ விசாரிக்க வருகிறவர்போல வந்து பிரவேசிக்கிறார். தூங்கிக் கொண்டிருந்த பெண் திடுக்கிட்டு எழுந்திருக்கிறாள். கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்க்கிறாள். யாரோ முன்பின் அறியாதவர் எதிரில் நிற்பதைக் கண்டு, ''ஐயா! இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் என் உள்ளத்திலே புகுந்த நீர் யார்? கள்ளரா?'' என்று வினவுகிறாள். அப்போது வந்தவர் கண்ணோடு கண் கலக்கும்படி அந்தப் பெண்ணை உற்றுப் பார்க்கிறார். பார்த்துவிட்டு நகை செய்கிறார். அந்த நகைப்போடு கலந்த, ''நானா கள்ளன்? கள்ளத்தனமென்பதே அறியாத வெள்ளை மனத்தவனாயிற்றே? அதற்கு அறிகுறியாக என் மேலேயும் வெண்ணீறு பூசியிருக்கிறேனே, தெரியவில்லையா?'' என்கிறார். வானத்திலே விளங்கிய இளம் பிறையைக் திருடித்



தம் சிரசிலே அணிந்து கொண்ட பெருமான்தான் இப்படி ஒன்றும் தெரியாதவர்போல நடித்தார்! ஆகா! அந்த இளம் பிறையின் அழகைச் சொல்வேனா? அவருடைய கள்ளத்தனத்தைச் சொல்வேனா? அல்லது கள்ளமற்றவர்போல் அவர் நடித்த நடிப்பைச் சொல்வேனா?

மேற்கூறிய இவ்வளவு உள்ளப்பாடுகளும் வெளியாகும்படியாகச் சிவகாமி தன் முகபாவங்களினாலும், அங்கங்களின் சைகைகளினாலும், கைவிரல்களின் முத்திரையினாலும் உணர்ச்சியோடு கலந்து அற்புதமாக அபிநயம் பிடித்தாள்.

பாடலும் அபிநயமும் சபையோருக்கு எல்லையற்ற குதூகலத்தை அளித்துப் பல முறை 'ஆஹா'காரத்தை வருவித்தது. ஆனாலும் சபையோர்கள் திருப்தி அடைந்தவர்களாகக் காணவில்லை. அவர்களில் ஒருவர் துணிந்து எழுந்து அரங்க மேடைக்குச் சென்று ஆயனர் காதோடு ஏதோ சொன்னார். அது சிவகாமியின் செவியிலும் விழுந்தது. சிவகாமி சிறிது தயக்கத்துடனேயே,

**'' முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் ''**

என்று பாடிக் கொண்டு அபிநயம் பிடிக்க ஆரம்பித்தாள். எவ்வளவோ திறமையுடனே, விதவிதமான உள்ளப் பாடுகள் அற்புதமாக வெளியாகும்படி அபிநயம் பிடித்தாள்.

பாட்டும் அபிநயமும் முடியும் தருவாயில் சபையிலே பலருக்கு, ஆவேசமே வந்துவிட்டது!

வயது சென்ற ஒரு கிழவர் எழுந்து நின்று, ''நடராஜா, நடராஜா! நர்த்தன சுந்தர நடராஜா!'' என்று பாடிக் கொண்டே ஒரு காலைத் தூக்கியவண்ணம் சபையிலே நடனமாடத் தொடங்கி விட்டார்.

''இம்மாதிரி உணர்ச்சி வாய்ந்த அபிநயத்தை இது வரையில் யாரும் பார்த்ததில்லை; இனிமேல் பார்க்கப் போவதுமில்லை'' என்று சபையோர் ஒருவருக்கொருவர் கூறி மகிழ்ந்தார்கள்.

ஆனால், இன்று அந்தப் பாடலுக்கு அபிநயம் காஞ்சியில் நாவுக்கரசர் பெருமான் சந்நிதியில் அமைந்தது போல் அவ்வளவு உணர்ச்சியுடன் அமையவில்லையென்று மூன்று பேருக்கு மட்டும் தெரிந்திருந்தது. அந்த மூவர் ஆயனர், மாமல்லர், சிவகாமி ஆகியவர்கள்தான்.

சிவகாமி இன்றைக்கு அபிநயத்தின் முடிவில் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்துவிடவும் இல்லை.

## முப்பத்தாறும் அத்தியாயம்

# புதிய பிறப்பு

**ம**ண்டபப்பட்டுக் கிராமத்துக்கு வந்து சேர்ந்த மூன்றாம் நாள் சாயங்காலம் ஆயனர், சிவகாமி, மாமல்லர் ஆகிய மூவரும் கிராமத்துக்கு வெளியே உலாவி வரக் கிளம்பினார்கள். பாறையில் படகு மோதி அவர்கள் நீரில் மூழ்கிய இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

வெள்ளம் இன்றைக்கு ரொம்பவும் வடிந்து போயிருந்தது. அன்று தண்ணீரில் மூழ்கியிருந்த இடங்களில் இன்று நீர் வடிந்து பாறைகள் நன்றாய்த் தெரிந்தன. கரையோரத்து மரங்கள் அன்று பாதிக்கு மேலே வெள்ளத்தில் மூழ்கியிருந்தன. இன்றைக்கு அதே மரங்களின் வேரின்மீது தண்ணீர் 'சலசல' வென்று அரித்தோடிக் கொண்டிருந்தது. பாறைப் பிரதேசமாதலால் வெள்ளத்

"நான் ராபின் ப்ளூவைத்தான் உபயோகித்து வருகிறேன். காரணம், அது எப்பொழுதும் வெள்ளைத் துணி-உடைகளை மிகப்பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குகின்றது."

## வெள்ளைத் துணி-உடைகளை மிகப்பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதற்கு

# ராபின் ப்ளூ தான் தேவை

(என்பதை லட்சக்கணக்கான குடும்பப் பெண்கள் ஒப்புக்கொள்ளுகின்றனர்)




வெள்ளைத் துணி-உடைகளை, ஸோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

ARBC-38 TAM

# எஸ்ட்ரெலா சக்தி




இந்த சக்தி
தரும் ஒலி
உங்கள்
காதுகளில்
ரீங்காரம்
செய்கிறது.

இந்த சக்தி
தரும் ஒளியை
நீங்கள்
கண்ணெதிரே
காணலாம்





**உங்கள் டிரான்ஸிஸ்டர் மற்றும் டார்ச்சில் எஸ்ட்ரெலா சக்தி காட்டும் அதிசயம் பாரீர்!**



**எஸ்ட்ரெலா** பாட்டரிகளின் சக்தி: குடத்தில் காவேரிபோல!

எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்-400 019.

CMEB-2-203

துக்குப் பிறகு இடங்கள் வெகு சுத்தமாயிருந்தன.

அந்தப் பாறைகளைச் சுற்றிச் சுற்றி வந்து பார்ப்பதில் ஆயனர் அடங்காத ஆர்வம் கொண்டவராயிருந்தார். இந்த இந்தப் பாறையை இன்ன இன்ன மாதிரி கோயிலாக அமைக்கலாம், இன்னின்ன சிற்ப வடிவங்களாகச் செய்யலாம் என்று அவர் உள்ளம் கற்பனை செய்து கொண்டிருந்தது.

சிவகாமியும் மாமல்லருமோ, மகிழ மரத்தடியில் பாறையின்மீது உட்கார்ந்து மௌனம் சாதிப்பதில் அடங்காத பிரியம் கொண்டவர்களாகத் தோன்றினார்கள்.

பகலும் இரவும் மயங்கிக் கலந்திருந்த அந்தநேரத்தில் ஆயனர் அரை மனமாக, ''போகலாமா, சிவகாமி!'' என்று கேட்டார்.

''அப்பா! இன்றைக்கு இருட்டி இரண்டு நாழிகைக்குப் பிறகு சந்திரோதயம் ஆகுமல்லவா? அதைப் பார்த்து விட்டுப் போகலாமே?'' என்றாள் சிவகாமி.

''அதற்கென்ன, அப்படியே செய்யலாம்!'' என்று கூறி ஆயனர் அவர்களுக்கு அருகில் தாமும் உட்கார்ந்தார்.

சற்று நேரம் மௌனம் குடி கொண்டிருந்தது.

''இந்த ஊரைவிட்டுப் போகவே எனக்கு மனம் வராதென்று தோன்றுகிறது!'' என்றார் ஆயனர்.

''இந்த ஊர் அதிர்ஷ்டம் செய்த ஊர். கிராமவாசிகள் சொன்னார்களே, அது உண்மைதான்!'' என்றார் மாமல்லர்.

''ஏன் அப்பா, அவ்வளவு தூரம் இந்த ஊர் உங்களுக்குப் பிடித்துவிட்டதன் காரணம் என்ன?'' என்று சிவகாமி கேட்டாள். ...

''இந்தப் பாறைகளைப் பார்க்கும் போது எனக்கு ஆசையாயிருக்கிறது. திவ்வியமான கோயில்கள் அமைப்பதற்குக் கை ஊறுகிறது.''

''இன்னும் எத்தனையோ ஊர்களிலேயும் பாறைகள் இருக்கின்றன!'' என்றாள் சிவகாமி.

''இந்தக் கிராமவாசிகள் நல்ல ரஸிகர்கள். நேற்று உன் நடனத்தைப் பார்த்து எவ்வளவு ஆனந்தப்பட்டார்கள்!''

''ஐயா! காஞ்சியிலே ரஸிகர்கள் இல்லையென்று கூறுகிறீர்களா?'' என்று மாமல்லர் பொய்க் கோபத்துடன் கேட்டார்.

''மகேந்திர பல்லவரும் அவருடைய திருக் குமாரரும் இருக்கும் காஞ்சியில் ரஸிகர்கள் இல்லாமல் போய் விடுவார்களா? — அந்த எண்ணத்துடன் நான் சொல்லவில்லை. எங்கேயோ போகலாம் என்று யாத்திரை கிளம்பியவர்களைக் கடவுளே பார்த்து இந்த ஊரில் கொண்டு விட்டிருக்கிறார். நாங்கள் இங்கேயே இருப்பதுதான் இறைவனுடைய சித்தம் என்று தோன்றுகிறது!''

''அப்பா! நாகநந்தி பிக்ஷு வெள்ளம் வந்த அன்று போனாரே, அவர் என்ன ஆகியிருப்பார்?'' என்று சிவகாமி கேட்டாள்.

''ஐயோ! பாவம்! என்ன ஆனாரோ, தெரியவில்லை. அந்த வயோதிக பிக்ஷுவின் கதியும் என்ன ஆயிற்றோ, தெரியவில்லை!''

அப்போது மாமல்லர் தம்முடன் வந்த சைனியத்தின் கதி என்ன ஆயிற்றோ என்று நினைத்தார். குண்டோ



தரன் படகு சம்பாதித்துக் கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டுக் காலையிலேயே போனவன் இன்னும் ஏன் திரும்பி வரவில்லை....?

சற்று நேரத்துக்கெல்லாம் கீழ் அடிவானத்தில் ஏறக்குறைய வட்டவடிவமான சந்திரன் உதயமானான். அவனுடைய கிரணங்களினால் வெண்ணிறம் பெற்ற வெள்ளப் பரப்பு, தேவர்கள் அமுதத்துக்காகக் கடைந்த பாற்கடலைப் போல் ஜொலித்தது. வெள்ளத்திலிருந்து சந்திரன் மேலே கிளம்பியது, அந்தப் பாற்கடலிலிருந்து அமுதம் நிறைந்த தங்கக் கலசம் எழுந்ததுபோல் இருந்தது.

சிறிது நேரம் சந்திரோதயத்தின் அழகைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு ஆயனருக்கு இருப்புக் கொள்ளவில்லை. ''நிலா வெளிச்சத்தில்

ஒரு தடவை இந்தப் பாறைகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

* * *

**மா**மல்லரும் சிவகாமியும் வெகு நேரம் மௌனமாய் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய இரு கைகள் மட்டும் ஒன்றுசேர்ந்து அந்தரங்கம் பேசிக் கொண்டிருந்தன.

அவர்களைச் சுற்றி வெளியிலே மகிழம் பூவின் நறுமணம் நிறைந்து மூச்சுத் திணறும்படி செய்தது.

அவர்களுடைய உள்ளங்களிலே இன்ப உணர்ச்சி ததும்பி மூச்சுத் திணறும்படி செய்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்களுக்குக் கீழேயிருந்த பூமி இலேசாக நழுவி அவர்களை அந்தரத்தில் விட்டுச் சென்றது.



அவர்களுடைய தலைக்கு மேலே வானமானது, சந்திர மண்டலம் நட்சத்திரங்களுடன் திடீரென்று மறைந்து விட்டது!

''எங்கேயோ, எங்கேயோ, எங்கேயோ எல்லையில்லாத வெள்ளத்தில் மிதந்து மிதந்து அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். அவ்விதம் அவர்கள் செய்த ஆனந்த யாத்திரை ஒரு கண நேரமா அல்லது நீண்ட பல யுகங்களா என்பது தெரியாதபடி காலாதீத நிலையை அடைந்து, மேலே, இன்னும் மேலே, அதற்கும் மேலே போய்க் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று, அமுதமளாவிய குளிர்ந்த இளங்காற்று வீசி, மகிழ மரத்தின் கிளைகளில் சலசலப்பை உண்டுபண்ணியது.

அந்தக் கிளைகளிலிருந்து மகிழம் பூக்கள் பொலபொலவென்று அவர்களுடைய தலைமேல் உதிர்ந்தன.

இருவரும் தடாலென்று பூலோகத்துக்கு வந்து சேர்ந்தார்கள். மண்டபப்பட்டுக் கிராமத்துப் பாறையின் மேல் மகிழ மரத்தினடியில் தாங்கள் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள்.

''சிவகாமி! என்ன சிந்தித்துக் கொண்டிருந்தாய்?'' என்று மாமல்லர் கேட்டபோது, வெகு வெகு தூரத்திலிருந்து அவருடைய குரல் கேட்பது போல் இருந்தது.

''பிரபு! கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். விழுந்துவிடுவேன் போல் இருக்கிறது!'' என்றாள் சிவகாமி.

''ஏன் சிவகாமி, உன் உடம்பு இப்படி நடுங்குகிறது? குளிர் காற்றினலா?'' என்று மாமல்லர் கேட்டார்.

''இல்லை, பிரபு! குளிர் இல்லை. என் உடம்பு கொதிக்கிறதைப் பாருங்கள்!'' என்று சிவகாமி சொன்னபோது அவளுடைய குரலும் நடுங்கிற்று.

''பின் ஏன் இவ்விதம் நடுங்குகிறாய்?''

''ஏதோ பயமாயிருக்கிறது. நான் உயிரோடுதான் இருக்கிறேனா?''

''இது என்ன கேள்வி? உயிரோடு இல்லாவிட்டால் எப்படி என்னுடன் பேச முடியும்?''

''சற்று முன்னால் எனக்கு எங்கேயோ வான மார்க்கத்தில் பிரயாணம் போவதுபோல் தோன்றியது. சத்தமில்லாத ஒரு தெய்வீக சங்கீதம் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தது. அதன் தாளத்துக்கிணங்க என் ஆத்மா நடனமாடிக் கொண்டு மேலுலகம் சென்றது. அதெல்லாம் பிரமைதானே? உண்மையாக நான் இறந்துபோய்விடவில்லையே?''

''ஆம்; சிவகாமி! ஒருவிதத்தில் நாம் இருவருமே இறந்து விட்டோம். ஆனால், மறுபடியும் பிறந்திருக்கிறோம். இருவருக்கும் இது புனர்ஜனமம்தான். மூன்று நாளைக்கு முன்னால் நாம் இந்தக் கிராமத்துக்கு வந்தபோது தனித்தனி உயிருடனும் உள்ளத்துடனும் இருந்தோம். இன்று அந்தச் சிவகாமி இல்லை நீ; நானும் அந்த நரசிம்மவர்மன் இல்லை. என் உயிரிலும் உள்ளத்திலும் நீ கலந்திருக்கிறாய். அப்படியே உன் உயிரிலும் உள்ளத்திலும் நான் கலந்து போயிருக்கிறேன். ஆகையால், நாம் இருவரும் மரணமடைந்து மறுபிறப்பும் அடைந்து விட்டோம். எல்லாம் மூன்றே நாட்களில்...!''

''நிஜமாக மூன்று நாட்கள்தானா? என்னால் நம்ப முடியவில்லை. எத்

தனையோ நீண்ட காலம் மாதிரி தோன்றுகிறது !''

''அதுவும் உண்மையே. இந்த மூன்று நாட்கள் வெறும் மூன்று நாட்கள் அல்ல. இதற்குமுன் எத்தனையோ ஜன்மங்களில் நாம் ஒருவரையொருவர் பார்த்திருக்கிறோம் ; காதலித்திருக்கிறோம். பிரிந்திருக்கிறோம்; சேர்ந்திருக்கிறோம். அவ்வளவு அனுபவங்களையும் இந்த மூன்று தினங்களில் திரும்ப அனுபவித்தோம்.''

'' இதோடு எல்லாம் முடிந்து போய்விட்டதா ?''

''எப்படி முடிந்து விடும் ? பல ஜன்மங்களில் தொடர்ந்து வந்த உறவு இந்த ஜன்மத்தோடு மட்டும் எப்படிமுடியும்?''

''வருகிற ஜன்மங்களைப் பற்றி நான் கேட்கவில்லை. இந்த ஜன்மத்தைப் பற்றித்தான் கேட்கிறேன். இந்தஜன்மத்தில் எப்போதும் இப்படியே இருக்குமா?''

'' எது எப்படி இருக்குமா என்று கேட்கிறாய் ?''

''உங்களுடைய அன்பைத்தான் கேட்கிறேன் !''

மாமல்லர் தமக்கு அருகில் பாறையில் உதிர்ந்து கிடந்த மகிழம் பூக்களைத் திரட்டிச் சிவகாமியின் கையில் வைத்தார்.

''சிவகாமி என்னுடைய அன்பு மல்லிகை — முல்லை மலர்களைப் போல் இன்றைக்கு மணத்தை வாரி வீசிவிட்டு நாளைக்கு வாடி வதங்கி மணமிழந்து போவதன்று. என் அன்பு மகிழம் பூவை ஒத்தது; நாளாக ஆக அதன் மணம் அதிகமாகும். வாடினாலும் காய்ந்து உலர்ந்தாலும் அதன் மணம் வளர்ந்து கொண்டுதான் இருக்கும். அன்றைக்கு, தாமரைக் குளக்கரையில் என்னிடம் வாக்குறுதி கேட்டாயே, ஞாபகம் இருக்கிறதா ?''

''இருக்கிறது!''

''அந்த வாக்குறுதியை இப்போதும் கோருகிறாயா ?''

'' வேண்டாம், பிரபு! வாக்குறுதி வேண்டாம் ! தங்களுடைய மன்னிப்புத்தான் வேண்டும் !''

'' எதற்கு மன்னிப்பு ?'' என்றார் மாமல்லர்.

''தங்களைப் பற்றிச் சந்தேகம் கொண்டதற்குத்தான். தங்களைப் பற்றி ஒரு துஷ்ட நாகம் கூறிய விஷம் கலந்த மொழிகளை நம்பியதற்காகத்தான் !'' என்றாள் சிவகாமி.

அப்போது இலேசாகச் சரசரவென்ற சத்தம் சமீபத்தில் கேட்கவே, சிவகாமி மிரண்டு போய்ச் சுற்றுமுற்றும் பார்த்தாள். மரக் கிளைகளின் நிழலும் நிலா வெளிச்சமும் மாறி மாறித் தரையில் படிந்திருந்த இடத்தில் அவர்களுக்குச் சமீபத்தில் ஒரு பாம்பு நெளிந்து நெளிந்து போய்க் கொண்டிருந்தது.

''ஐயோ! அப்பா! பாம்பு!'' என்று சிவகாமி அலறிக் கொண்டு எழுந்தாள்.

மாமல்லரும் குதித்து எழுந்து சிவகாமியை ஆதரவுடன் தம்மோடு சேர்த்து அணைத்துக் கொண்டார். ''பயப்படாதே, சிவகாமி! நான் இருக்கும்போது என்ன பயம் ?'' என்றார்.

(தொடரும்)

## கோடை ஹாஸ்யம் - 1

**சபா காரியதரிசி: அதிக ஆர்ப்பாட்டம் பண்ணிச் சத்தமாப் பாடவேண்டாம். ஏன்னா, சோடா, கலரெல்லாம் கொடுத்துக் கட்டுப்படியாகாது. எல்லாம் ஏகத்துக்கு விலை ஏறிப் போச்சு !**



## கோடை ஹாஸ்யம் - 2

**''குச்சி ஐஸ்கிரீம் கேட்டா குச்சியை மட்டும் கொடுத்துவிட்டுப் போனாயே!''**

**''இந்த உருகுகிற வெய்யலில் குச்சியாவது கிடைத்ததே என்று சந்தோஷப் படுப்பா !''**



மலைக்க வைத்த மர்மங்கள்-6

# கதைக்குள் கதை!





நாடோடி

பெர்லின் நகரில் ஒரு குதிரை வண்டிக்காரன் இருந்தான். அவன் பெயர் கன்ராட். அவனுக்கு ஒரு மனைவியும் ஐந்து குழந்தைகளும் இருந்தார்கள். இருந்தாலும் அவன் தன் குடும்பத்தைக் கவனிக்காமல் தனியாக ஓர் அறையில் வசித்து வந்தான். அவன் மனைவியும், குழந்தைகளும் இருந்த சிறு வீடு, ஒருநாள் வெகு நேரம் திறக்காமல் கிடக்கவே, அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்கள் கவலைப் பட்டு, கதவைத் தட்டிப் பார்த்தார்கள். பல தடவைகள் தட்டியும் கதவு திறக்காமல் இருக்கவே போலீஸாருக்குத் தகவல் கொடுத்தனர். போலீஸார் வந்து பார்த்ததில், அந்த வீட்டுக்கு, அந்த ஒரு கதவைத் தவிர வேறு ஒரு வழியும் கிடையாது என்று தெரிந்தது. கதவோ உள் பக்கம் பூட்டப்பட்டிருந்தது. ஆகவே அவர்கள் கதவை உடைத்து உள்ளே நுழைந்தார்கள்.

உள்ளே அவர்கள் கண்ட காட்சி அவர்களைத் திடுக்கிட வைத்தது. திருமதி கன்ராட் செத்துக் கிடந்தாள். அவளுடைய சடலம் மேலே உள்ள உத்தரத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்தது! பக்கத்தில் அவளுடைய ஐந்து குழந்தைகளும் தூக்கில் தொங்கிக் கொண்டிருந்தார்கள்!

கதவு உள் பக்கம் பூட்டப்பட்டிருந்ததாலும், கணவனால் நிராகரிக்கப்பட்ட திருமதி கன்ராட் ஏழைமை நிலையில் இருந்ததாலும் அவள் தன் ஐந்து குழந்தைகளைக் கொன்றுவிட்டு, தானும் தற்கொலை செய்து கொண்டு இறந்துவிட்டாள் என்று போலீஸார் தீர்மானித்தார்கள்.

ஆனால் இந்தச் சமயம் பெர்லின் நகரில் ஹால்மான் என்று ஒரு மாஜிஸ்டிரேட் இருந்தார். அவர் துப்புத் துலக்குவதில் நிபுணராக இருந்தார். ஆனால் அதைவிட மனோதத்துவத்தில் அதிக நிபுணராக விளங்கினார். என்னதான் வறுமை இருந்தாலும் ஒரு தாயார் தன்னைக் கொன்று கொள்ளுவாளே தவிர, தன் ஐந்து குழந்தைகளையும் ஒன்றன்பின் ஒன்றாக அத்தனை குரூரமான முறையில் கொல்லுவாளா என்பது அவருக்குச் சந்தேகம். ஆகவே, இது விஷயத்தை ஆராய வேண்டும் என்று அவர் தீர்மானித்தார்.

இறந்தவளின் கணவன் 'கன்ராட்'டைப் பற்றி விசாரித்தபோது, அவன் மிகவும் கெட்டிக்காரன் என்றும், குதிரை வண்டிக்காரனாக இருந்தாலும் நிறைய படிப்பது வழக்கம் என்றும் அவனிடம் நிறையப் புத்தகங்கள் இருந்தன என்றும் கேள்விப்பட்டார். இன்னும் அவனைப் பற்றி விசாரித்ததில், அவன் மிகுந்த அயோக்கியன் என்றும், தன்னைவிட முப்பது வயது குறைந்த ஓர் இளம் பெண்ணோடு நட்புறவு கொண்டிருந்தான் என்றும், அதனால்தான் மனைவியையும் குழந்தைகளையும் கவனிப்பது இல்லையென்றும் தெரிந்தது.

கன்ராட்டை விசாரித்ததில் அவன் தனக்கு ஒன்றும் தெரியாது என்று சாதித்தான். "கதவு உள் பக்கம் பூட்டப்பட்டிருக்கையில் அதை எப்படிக் கொலை என்று சொல்ல முடியும்? என் மனைவி குழந்தைகளைக் கொன்றுவிட்டு, தானும் தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும்" என்று சொன்னான்.

ஹால்மான் அந்த வீட்டின் தாழ்ப்பாளைப் பரிசோதித்துப் பார்த்தார். அது பழைய காலத்துச் செருகு தாழ்ப்பாள்; மரக்கட்டையால் ஆனது. கதவுடன் பொருத்தப்பட்டிருந்த அதைத் தள்ளினால் சுவரில் உள்ள ஒரு துவாரத்துக்குள் நுழையும். அப்பொழுது கதவை வெளிப் பக்கத்திலிருந்து யாரும் திறக்க முடியாது.

இத்தகைய தாழ்ப்பாளை உள்பக்கத்திலிருந்துதான் போட முடியுமேயொழிய வெளிப் பக்கத்திலிருந்து போட முடியாது. அந்தச் சிறு வீட்டுக்கோ ஜன்னல் கதவுகூடக் கிடையாது.

ஆகவே கதவை உடைத்த போலீஸாரை அவர் மீண்டும் விசாரித்தார். "நீங்கள் கதவை உடைத்தபோது அது உள்பக்கம் தான் தாழ்ப்பாள் இடப்பட்டிருந்ததா?" என்று கேட்டார்.

" நிச்சயமாக உள் பக்கம்தான் தாளிடப் பட்டிருந்தது. நாங்கள் கதவை உடைத்ததன்

காரணமாக மரத் தாழ்ப்பாள் முறிந்து கிடப்பதைப் பாருங்கள்'' என்று போலீஸ்காரர்கள் பதில் சொன்னார்கள்.

இதற்கிடையில் கன்ராட்டை விசாரணை செய்ததில், தான் அன்று தன் மனைவி வசித்த வீட்டுப் பக்கமே வரவில்லை என்றும், வேறு எங்கோ இருந்ததாகவும் சொன்னான். ஆனால் அவனைக் குடைந்து, குடைந்து, கேள்விகள் கேட்டதில், அவன் முன்பின் முரணான பதில்கள் சொல்ல ஆரம்பித்தான். இதனால் ஹால்மானுக்குச் சந்தேகம் அதிகரித்தது.

கன்ராட்தான் தன் மனைவியையும் குழந்தைகளையும் கொன்றிருக்க வேண்டும் என்று அவர் தீர்மானித்தார். ஆனால் கதவு உள் பக்கம் தாளிடப்பட்டிருந்ததே, அதற்கு விளக்கம் எப்படிக் கண்டுபிடிப்பது?

கன்ராட் தனியாக வசித்த அறையில் உள்ள பொருள்களை ஹால்மான் பரிசோதனை செய்தார். ஒன்றும் துப்பு கிடைக்கவில்லை.




அவன் காதலித்துக் கொண்டிருந்த பெண்ணிடமிருந்து வந்த கடிதங்கள் இருக்குமோ என்று பார்த்தார். கிடைக்கவில்லை.

கடைசியில் அங்கு கன்ராட் நிறையச் சேர்த்து வைத்திருந்த புத்தகங்களைப் பரிசோதனை செய்ய ஆரம்பித்தார். அத்தனையும் துப்பறியும் நாவல்கள்! இந்த நாவல்களுக்கிடையில் ஏதாவது காதல் கடிதங்கள் கிடைக்குமா என்று பார்த்தார். கிடைக்கவில்லை. ஒவ்வொரு நாவலாக, அவர் ஏதாவது காதல் கடிதம் வைக்கப்பட்டிருக்குமோ என்று பரிசோதித்துக் கொண்டு வருகையில் கடைசியில் 'நானு சாகிப்' என்னும் ஒரு நாவல் வந்தது. அதைக் கையில் எடுத்ததும், அது தானாகவே ஒரு பக்கத்தில் திறந்தது. கன்ராட் புத்தகத்தை அடிக்கடி அந்தப் பக்கத்தில் திறந்து பார்த்திருக்க வேண்டும் என்று ஹால்மான் தீர்மானித்தார். அந்தப் பக்கத்தை கான்ராட் அடிக்கடி புரட்டிப் பார்த்திருக்க வேண்டும் என்பதற்கு அடையாளமாக, அந்த இரண்டு பக்கங்களும் அழுக்கடைந்து காணப்பட்டன.

அந்த இரண்டு பக்கங்களிலும் என்னதான் எழுதியிருக்கிறது என்று ஹால்மான் படிக்க ஆரம்பித்தார். அந்தக் கதையாவது:

நானு சாகிப் என்னும் ஒரு கோடீசுவரர் லண்டன் ஹோட்டல் அறை ஒன்றில் செத்துக் கிடக்கிறார். அந்த ஹோட்டல் அறைக்கு ஒரே ஒரு கதவுதான், அந்த ஒரே கதவும் உள் பக்கம் தாழ்ப்பாள் இடப்பட்டிருக்கிறது... அந்தத் தாழ்ப்பாளும் செருகு தாழ்ப்பாள்!

அந்தத் தாழ்ப்பாளை வெளிப் பக்கத்திலிருந்து கொலையாளி எப்படியோ தாளிட்டிருக்க வேண்டும் என்று துப்பறிபவர் தீர்மானித்து, கதவைப் பரிசோதித்துப் பார்க்கிறார். தாழ்ப்பாள் பக்கத்தில் 'மக்'கால் அடைக்கப்பட்ட ஒரு சிறு துவாரம் தெரிகிறது. அந்தத் துவாரத்தின் மூலம் ஒரு சிறு கம்பியை உள்ளே செலுத்தி, தாழ்ப்பாளை வெளிப் பக்கத்திலிருந்தே தாளிட முடியும் என்று கண்டு பிடிக்கிறார்.

இதைப் படித்ததுதான் தாமதம், ஹால்மான் புத்தகத்தை எடுத்துக் கொண்டு திருமதி கன்ராட்டின் சிறு வீட்டுக்கு ஓடினார். அதன் கதவைப் பரிசோதித்தார். நாவலில் கண்டுள்ளது போல் ஒரு சிறு துவாரம் தாழ்ப்பாளுக்குப் பக்கத்தில், 'மக்'கினால் அடைபட்டுக் கிடந்தது தெரிந்தது!

அவ்வளவுதான், கன்ராட்தான் தன் மனைவியையும், குழந்தைகளையும் கொலை செய்தவன் என்று நிரூபணமாயிற்று. கன்ராட்டுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.

## ஆரோக்கியம் அழைக்கிறது

உடலின் தலைநகரம் மூளை என்றால் அதனுடன் ஒட்டிய முதுகுத்தண்டை மாநிலத் தலைமையகங்களின் வரிசை எனலாம். கழுத்திலிருந்து ஆசன மூலைவரை நீண்ட இந்த நரம்பு வடம், மூளைப் பகுதியைப் போலவே முக்கியமானது; மூளையைப்போலவே பலத்த பாதுகாப்புப் பேழையில் பத்திரமாக இருப்பது. முதுகு எலும்புகளின் சங்கிலி வடம் அமைத்த குழலின் பத்திரமான பாதுகாப்புத் தவிர, மூளையைப் போல மூன்று காப்பு உறைக் கவசம் இதற்கும் உண்டு. 'செரிப்ரோ ஸ்பைனல்' திரவம் இந்த நரம்பு வடத்தைச் சூழ்ந்தும் ஓடுகிறது.

முதுகு எலும்புகளுக்கு இடையே உள்ள ஒவ்வொரு இடைவெளி வழியாகவும் முதுகுத் தண்டு நரம்பு இரு பக்கங்களிலும் புறப்பட்டு உடலுறுப்புகளுடன் தொடர்பு கொள்கிறது. இப்படி முப்பது ஜதைப் பாதைகள்.

மூளையிலே நரம்புயிர் — அணுக்கள் மேலோங்கி, பழுப்பாக இருக்கும். இங்கோ நரம்புயிர் அணுக்கள் உள்ளே அடங்கியிருக்க, நரம்புநார் இழைகள் சூழ்ந்து, வெண்மையாக இருக்கும். நரம்புநார்-இழைகள்தான் உடலுறுப்புகளுடன் தொடர்பு கொள்ள வாய்ப்பானவை.

முதுகுத்தண்டு நரம்பு அமைப்பின் இயக்கத்தைக் கவனித்தால் இயற்கையின் அற்புதமான ஒழுங்கும் முன் யோசனையும் புலனாகின்றன. நெடிதாக நீண்ட நரம்புத் தண்டின் ஒவ்வொரு குறிப்பிட்ட பகுதியும் உடலின் குறிப்பிட்ட உறுப்புகளோடு தொடர்பு கொண்டிருக்கும். எல்லை மீறல் நேராத அனுசரணை. ஒவ்வொரு உறுப்புடன் அமைந்துள்ள நரம்புப் பாதைப் போக்கு வரவில் மோதல் நேர வழியில்லாதபடி ஒரு வழிப் பாதை. ஆமாம். விரலில் சூடு பட்டால் அந்த உணர்ச்சியைத் தெரிவிக்கும் பாதை ஒன்று; சுடும் விரலைச் சரேலென்று எடுக்கச் சொல்லிப் பிறக்கும் கட்டளையைத் தாங்கி வரும் பாதை வேறு.

உடலின் ஒவ்வொரு உறுப்பிலும் நரம்பின் ஆதிக்கம் இருக்கிறது. நரம்பின்றி ஓர் உறுப்பும் அசையாது எனலாம். உடலெங்கும் பரவிப் படர்ந்த இயக்குனரே நரம்பு மண்டலம். உடல் இயக்கம் அனைத்தையும் தலைநகரான மூளையின் நரம்பணுக்களே நிர்வகித்தாலும் பழக்கமாக ஆக பெரும் பொறுப்பை மாநிலத் தலைநகர வரிசையான முதுகுத் தண்டே ஏற்று நடத்துகிறது. இதனால் தான் கவனம் எங்கோ இருந்தாலும் காலால் சைக்கிள் ஓட்டி வீடு செல்ல முடிகிறது. நண்பருடன் பேசியபடி கை தட்டெழுத்தை இயக்குகிறது.

உடலுக்கு உயிரான உறுப்புக்கள் என்று கருதத் தக்க இதயம், இரைப்பை, குடல் இயக்கங்களை மொத்தமாக.மூளை கவனித்துக்கொள்கிறது; ஆனாலும் முதுகுத்தண்டு நரம்புகளே இவற்றின் பல இயக்கங்களுக்குப் பொறுப்பு ஏற்கின்றன. தம்மைத் தாமே கவனித்துக் கொள்ளும் இந்த வகை நரம்புகளில் இரண்டு பிரிவுகள் உண்டு: இயக்க வேகத்தை அதிகரிப்பது ஒரு பிரிவு; மிதப்படுத்துவது ஒரு பிரிவு. விழிப்பிலும் உறக்கத்திலும் இவை தம் பங்கைச் செவ்வனே ஆற்றுகின்றன.

நரம்புநார் இழைகளின் அமைப்பை மின்னோட்டத்துடன் ஒப்பிட்டால் அவை முதுகுத் தண்டிலிருந்து புறப்பட்டு உடலுறுப்புக்களுக்குச் சென்று மீண்டும் முதுகுத் தண்டை அடைவது ஒரு சுற்று (சர்க்யூட்); மூளையுடன் தொடர்பு கொள்வது மற்றொரு மின்வட்டம்.

சூழ்நிலையின் தட்ப வெப்பங்களுக்கு உடலை அனுசரிக்க வைப்பது நரம்புகளே. வெளி உறுப்புக்களிலோ உள்ளுறுப்புக்களிலோ தெரியும் வலியை உணர்ந்து ஏற்ற நடவடிக்கை எடுக்க ஆணையிடுவது நரம்பின் பணியே. உடல் நிலை தடுமாறாமல் பார்த்துக் கொள்வதும் நரம்பின் பொறுப்பே.

சிறுநீர் கழிப்பதும் மலம் நீக்கலும் குழந்தைப் பருவத்தில் நினைத்ததும் செயல்படும் இயல்பான உடல் இயக்கங்கள். வயதாக ஆக, இந்த இயல்பான உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி இடமும் நேரமும் அனுசரித்து நிறைவேற்றப் பழக்குவதும் நரம்புகள்தான்.

ரத்தம் எந்த உடலுறுப்புக்கு எப்போது தேவை என்னும் முடிவு எடுப்பதும் அதை நிறைவேற்றுவதும் நரம்புகளே. சூழ்நிலை குளிர்ந்தால் அதை ஏற்க உடல் சூடாகிறது; சூழ்நிலை சூடாக இருந்தால் அதைத் தாங்க உடல் உஷ்ணத்தைக் குறைத்துக் கொள்

### இந்த நிலை நேராதிருக்க....



# நரம்பின்றி ஓர் உறுப்பும் அசையாது!

கிறது. ரத்தக் குழாய்கள் ஏற்றபடி விரிவதாலும் சுருங்குவதாலுமே இவை நேர்கின்றன. ரத்தக் குழாய்களை இப்படி ஏவுவன நரம்புகளே.

பயத்திலோ, வியப்பு உணர்ச்சியிலோ திடீரென்று சிறுநீர் கொட்டுவதும் மயிர்க்கூச்செறிவதும் வியர்த்துக் கொட்டுவதும் உண்டல்லவா? அந்தந்த உறுப்புக்களைச் சேர்ந்த நரம்புகளின் வழியே உணர்ச்சி நரம்பணுக்கள்" தம்மை வெளிப்படுத்திக் கொள்ளும் அடையாளங்களே இவை.

நரம்புகளின் ஆரோக்கியம் பிற உறுப்புகளின் ஆரோக்கியத்துக்கும் இயக்கத்துக்கும் அவசியம். நல்வாழ்வுக்கு முக்கிய படி. உடல், தனக்குக் கிடைக்கும் பெரும் பங்கை போஷாக்கை மூளைக்கும் நரம்புகளுக்கும்தான் முதலில் அனுப்பி வைக்கிறது.

பி வைட்டமின் குறைவு நரம்புக் குறைகளுக்கு ஒரு காரணம். போதை ஏறுவதற்கென்று விஷப் பொருள்களைக் கலந்து சாராயம் குடிப்பவர்களின் நரம்புகள் பலவீனமடைந்து விடுகின்றன. சில சமயம் சிகிச்சைக்கு அடங்காத அளவு கெட்டுப் போய் விடுகின்றன.

பூச்சி மருந்து தெளித்தல், விஷவாயு அடித்தல் என்று நெடி நிறைந்த பகுதியில் நீடித்துப் பணியாற்றுவோர் கவனமாக இருக்க வேண்டும். விஷ அம்சங்கள் சுவாசத்தில் கலந்து, பிறகு நரம்பில் பரவிவிட்டால் குணமாவது கஷ்டம்.

உலோகத் தாதுக்களைக் கொண்டு வைத்தியம் .செய்வர் சிலர். இவை அளவிலோ கலவை விகிதத்திலோ பிசகிவிட்டால் நரம்பைக் கெடுக்கக் கூடிய ஆபத்து உண்டு.

நரம்புக் குறைகளைப் பொதுவாக நியூரைடிஸ் என்கிறார்கள். கைகால் மரத்துப் போவதிலிருந்து, இழுப்பு, பாரிசவாயு, குஷ்டம் வரையில் .எத்தனையோ இடர்கள், நரம்பின் கோளாறுகளே.

நன்கு வளர்ந்த மரத்தில் போஷாக்குக் குறைந்து விட்டால் அந்தக் குறை முதலில் எங்கே தெரிகிறது? இலை நுனிகளில்தான் அல்லவா? அதுபோல, நரம்பு மண்டலத்திலே கோளாறு என்றால் விரல் நுனிகளிலுள்ள சன்னமான நரம்பு இழைகளில் முதலில் தெரிகிறது. உணர்ச்சியற்று அடிக்கடி மரத்துப் போவது ஒரு நோய்ச் சின்னம். நீண்ட நேரம் ஒரே பாணியில் படுத்தாலோ இருந்தாலோ கூட உடலின் எடையால் அழுந்தப்பட்டிருந்த பகுதியில் ரத்த ஓட்டம் தடைபட்டு மரத்துப் போவது சகஜம். ஆனால் மரத்துப் போயிருக்கிறது என்ற உணர்ச்சியாவது இருக்கிறது. நரம்பு நோய் என்றால் இந்த உணர்ச்சிகூட அந்த இடத்தில் மரத்துப் போய்விடும்! கைகால்களில் எரிச்சலும் குடைச்சலும் நீடிக்கும். கரணை குன்றும். கை நுனியிலும் கால் விரல்களிலும் முதலில் தெரியும் அடையாளமானதால் இந்த நிலையை. 'ஸ்டாகிங் - கிளவ்' - மரத்தல்' என்று குறிப்பிடுவதுண்டு.

நரம்பு இடர் மிகுந்தால் நிலை தடுமாறும். கண் திறந்தபோதும், ஒளி மிகுந்தபோதும் சரியாக இருக்கும் நோயாளிகள், கண்ணை மூடிக் கொண்டு முகம் கழுவிக் கொள்ளும் போதும் அந்தி வெளிச்சத்திலும் சற்றே தடுமாறுவர்.

நீடித்த சர்க்கரை வியாதிக்காரர்களுக்கு நரம்புச் கரணை குன்றிப் போகிறது. அதனால் அவர்கள் கை கால்களில் எதையாவது பட்டுக் கொண்டு காயம் நேர்வதும், அந்தக் காயம் விரைவில் ஆறாமல் தவிப்பதும் நேர்கின்றன. சர்க்கரை வியாதி நரம்பைப் பாதிப்பதால் சிலர் நாளடைவில் மலட்டுத் தன்மையடைகின்றனர்.

குஷ்டமும் ஒருவகை நரம்புக் குறைதான். குணப்படுத்த முடியாததும் அல்ல. இப்போதைய சிகிச்சை முறைகளில் நரம்புகளுக்குப் போஷாக்கு அளித்து, நோய் மேலும் பரவாமல் பார்த்துக் கொள்ள முடியும். .மூன்று ஆண்டுகளில் தொடர்ந்த சிகிச்சை மூலம் கட்டுப்படுத்திக் குணப்படுத்தலாம்.

நரம்பு அணுக்களை வைரஸ் கிருமி தாக்கி அழிப்பதால் உணர்வற்றுப் போவதே இளம்பிள்ளை வாதம். இந்நோயில் முதுகுத்

## ... இதைச் செய்ய வேண்டும்.



குழந்தைகளுக்கு 'இளம்பிள்ளைவாத நோய்' வராமல் தடுப்பதற்கான மருந்து இனிப்பாக இருப்பதால் குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுகிறார்கள்.

தண்டு அமைப்பின் முன் பக்கத்திலுள்ள நரம் பணுக்கள் சேதமடைந்து செத்து விடுகின் றன. இந்த நோய் முன்னறிவிப்பின்றி வரும். 'சாதாரண சுரம்தான், ஒரு வாரத்தில் குண மாகிவிட்டது' என்று பெற்றோர் நிம்மதியாக இருக்கும்போது, குழந்தை வலி பொறுக்காது வாடும். வைரஸ் கிருமி உள்ளே போய்த் தன் திருவிளையாடலைத் தொடங்கி யிருக்கும். இளம்பிள்ளை வாதத் தடுப்பு மருந்து இப் போது எங்கும் கிடைக்கிறது. ஊசி தவிர, கல்கண்டு போலச் சுவைத்துத் தின்னக்கூடிய தடுப்பு மருந்தும் இப்போது வந்துள்ளது. இளம்பிள்ளைவாதம் என்பதால் குழந்தை களைத்தான் பாதிக்கும் என்பதில்லை. பெரிய வர்களையும் வாட்டும் நோய்தான். ஆனால் தடுப்பு மருந்தை ஐந்து வயதுக்குள் எடுத்துக் கொண்டால்தான் பலனளிக்கும்.

நரம்பின் மற்றொரு பெரிய இடர் டியூமர் (கட்டி). சில சமயம் முதுகுத்தண்டின் உள்ளே நரம்புக் கட்டி இருப்பது வெளியே தெரியாது. நரம்பு மண்டலத்தைச் சுற்றிப் பாயும் செரி ப்ரோ-ஸ்பைனல் திரவ ஓட்டம் இந்தக் கட்டி யால் பாதிக்கப்படும். அடி முதுகிலே ஊசி குத்தி நரம்பு நீர் எடுத்துச் சோதனை செய்தும் வண்ண நீரை அடி முதுகுத் தண்டிலே செலுத்தி அதன் ஓட்டம் எப்படித் தடைப் படுகிறது என்பதை எக்ஸ்ரே படத்தில் பார்த் தும் நரம்புக் கட்டியின் நிலைமையையும் தன் மையையும் அறிகிறார்கள். ஏற்ற சிகிச்சை அளிக்க முடிகிறது. ரண சிகிச்சையும் சில சமயம் தேவைப்படும்.

எலும்பைப் பற்றும் காசம் அடுத்துள்ள நரம்பையும் பாதித்துவிட வாய்ப்புண்டு. காசத்துக்கு மருந்து அருந்தும்போது கூடவே போஷாக்கு உணவும், ஆரோக்கியத்துக்கு வைட்டமின் போன்றவையும் தருவது இத் தகைய குறைகள் நேராமல் பார்த்துக்கொள் ளவே.

நரம்புநார் இழைகள் விபத்தில் அறுந்து விட்டாலும் கூட ஒட்டவைத்தால் சேர்ந்து விடும். எந்த ரண சிகிச்சையிலும் தோலை அடுத்த நுட்பமான நரம்பு இழைகள் பல அறுபடுகின்றன. பிறகு தாமே கூடுகின்றன. உள் உறுப்புக்களின் ரண சிகிச்சையின்போது பெரிய நரம்பு இழைநார்களை வெட்டாது, ஒதுக்கி வழி செய்து கொள்வார்கள்.

சில நரம்புயிர் அணுக்களின் செயலின்மை யால்தானே இளம்பிள்ளை வாதத்தில் உறுப் புக்கள் சுவாதீனமற்றுப் போகின்றன? ஆரோக் கியமான வேறு நரம்புநார் இழைகளிலிருந்தும் தசை நார் இழைகளிலிருந்தும் தொடர்பை இணைத்து, நிறையப் பயிற்சி அளித்து சுவா தீனமிழந்த உறுப்புக்களை இயக்க இப்போது கான்பூர் செயற்கை உறுப்பு ஆராய்ச்சி நிலை யத்தில் சோதனைகள் நடைபெற்று வருகின் றன. மருத்துவ உலகின் ஆராய்ச்சிகளுக்கும் முன்னேற்றங்களுக்கும் முடிவு ஏது?

ஆலோசனை:

டாக்டர் சி. யு. வேல்முருகேந்திரன்

கட்டுரை: தம்பி சீனிவாசன்



## கமலாவின் கலைப்பண்பு

ஸ்ரீமதி கமலா சிறுமியாயிருந்த போதிலிருந்து பரதக் கலைக்கே தம்மை அர்ப்பணம் செய்து கொண்ட வர். ஆனந்த வருஷம் பிறப்பன்று சென்னை, ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமி சபாவில் கமலா அதிவிமரிசை யான நடன விருந்து ஒன்று அளித்தார்.

''தசாவதாரம்'' தனித் தன்மை பெற்று விளங்கி யது. ஒவ்வொரு அவதாரத்தையும் பற்றி அபிநயபூர்வ மாக விளக்கம் அளித்த போது ரசிகர்கள் தங்களை மறந்து நடனக் கலையிலேயே ஒன்றி விட்டனர்.

அன்று மிகவும் சிறப்பாகவும், தமிழ்ப் புத்தாண்டுப் பரிசாகவும் விளங்கிய நிகழ்ச்சி ''மீனாக்ஷி கல்யாணம்'' தான். மலயத்துவச பாண்டியன், பாண்டிமா தேவி, மீனாக்ஷியம்மை, அம்மையின் கரம் பற்றிய ஐயன் சோமசுந்தரப் பெருமான் ஆகியவர்களை மேடையில் கண்ட போது ரசிகப் பெருமக்கள் பேரானந்தமடைந்த னர். ஐயன் அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து, மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்று ஊத தேவி அங்கயற்கண்ணியின் கைத்தலம் பற்றிய அற்புதக்காட் சியை தனது அபிநயங்களாலேயே மேடையில் எழிற் கோலமாகக் காட்டியது பிரமாதமாயிருந்தது. தேவ தேவனும், உலகத்து நாயகியும் பாவனையில் ஊஞ்சல் ஆடிய காட்சி மிக நயமான கலைத் திறனை உணர்த்தி யது. தாம் ஓரளவு ஒதுங்கிக் கொண்டு தம்மிடம் நடனக் கலையிலும் மாணவிகள் முன்னணிக்கு வரு வதில் பெரிதும் அக்கறை காட்டும் கமலாவின் பண்பு பாராட்டுக்குரியது. -காந்தன்

பேரெழில் கொஞ்சும் முகம்...

...ஃப்ரெஸ்கா தரித்த முகம்

மேல் மினுக்கற்ற மேனிவண்ண
மெல்லழகை உமக்கு
சொந்தமாக்குவதற்கென்றே
உருப்பெற்ற ஒரே ஒரு வதன
டால்கம் : ஃப்ரெஸ்கா.

மணம் கமழும் ஃப்ரெஸ்கா. மென்மை-
யிலும் மென்மையான டால்கம்.
இலேசாக முகத்தோடு இழைந்து,
என்றுமில்லா எழில் பரப்பும்.




**fresca**

ப்யூட்டி டால்க் கோத்ரெஜ் தயாரிப்பு

முகத்திற்குரிய முதன்மைப் பவுடர்: ஃப்ரெஸ்கா

Interpub/GSF/10/73 Tam

# வருகுது ஒரு புதிய மென்மை உங்கள் துணிகளுக்கு: புதிய லக்ஸ் பவுடர்




துணிகளுக்கு மென்மை-
யூட்டும் விசேஷப் பொருள்கள்
உள்ளன புதிய லக்ஸ் பவுடரிலே.
மதிப்பரிய ஆடைகளை அவை
புதுக் கருக்கான மென்மையோடு
பேணுகின்றன --- சலவைக்கு சலவை.
மென்மையும் கொஞ்சம் லக்ஸ்
சலவையிலே...பட்டாடைகளுக்குப்
பூப்போன்ற மெல்லிழைவு*...இராக் கால
உடைகள், ப்ரா, அனைத்துக்குமே அரவணைப்பான பராமரிப்பு...விலையுயர்ந்த
காருக்கான ஆடைச் செல்வங்கள் சட்டைகளுக்கும், ஸின்த்தெடிக் துணிகளுக்கும்
அதி உன்னதமான பொலிவு. சலவைக்குரியது லக்ஸ்...மென்மை தவழும் பவுடர்.

சென்னையிலும் பெங்களூரிலும்
மட்டுமே கிட்டும்.



* இந்தியாவிலே, சர்வதேசக்
கம்பளிச் செயலகத்தின்
நற்சான்றாகிய வுல்மார்க் முத்திரை
பெற்ற ஒரே ஒரு சலவைப்
பவுடர் லக்ஸ்.

## நேர்த்தியான துணிகளைப் புதுக் கருக்கான மென்மையோடு வைத்திருப்பது புதிய லக்ஸ் பவுடர்

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LXP- ta

## 35. எமதூதர்கள்!

வீரத்தில் தனஞ்செயன் தன் பெயருக்கு ஏற்ப நடந்து கொண்டதானது மைக்கேலின் உள்ளத்தில் பொறாமை எட்டிப் பார்க்கக் காரணமா யிருந்தது. 'எத்தனை துணிச்சலுடன் அந்த ஹைஜாக் ஆசாமிகளுடன் போராடி விமானத்தையும் பயணிகளையும் காப்பாற்றினான்! ஒரு விரலை அசைக்கக்கூட எனக்குத் துணிவு வரவில்லையே!' என்று எண்ணிக் குமைந்தான்.

அடுத்து, அவன் தீரமும், ஆகிருதியும், 'விரும்பியதை அடைந்தே தீருவேன்' என்கிற வகையில் அவன் நடந்து கொள்கிற விதமும் அனுபமாவை ஓரளவுக்கேனும் நிச்சயமாக ஆகர்ஷித்திருக்கின்றன; அந்தக் காந்த சக்தியிலிருந்து விடுபட முடியாமல் அவள் தவிக்கிறாள் என்பதற்கு அவனுக்கு ஐஃபெல் டவரின் உயரத்தில் அத்தாட்சி கிடைத்தது. 'அப்படி அவள் சிறிதளவேனும் தன் வயமிழப்பது உண்மையென்றால் எஃப். பி. ஐ. ஆசாமிகள் நியூயார்க்கில் தன் ஜாகைக்கு வந்து அவள்மீது குற்றம் சாட்டியதிலும் கொஞ்சம் நியாயம் இருக்கலாம் அல்லவா?' என்று சிந்தித்தான். 'என்னைக் கடத்திக் கொண்டு போக மெய்யாலுமே அவள் தனஞ்செயனுக்கு உதவுகிறாளோ?' என்று யோசித்தபோது அவனுக்கு வேதனை நெஞ்சை நிறைத்தது.

போதிய சாட்சியம் இல்லாத நிலையில் இதுபற்றி யெல்லாம் வெளிப்படையாகப் பேசவோ, சண்டை போடவோ, கௌரவமாகவே வாழ்ந்து பழகிவிட்ட அவனால் முடியவில்லை. வெளியே காட்டிக் கொள்ள முடியாத மனத் துயரைக் குறைக்க அவன் மதுவின் உதவியை நாடினான். மது போதை ஏறவும் காஸனோவா, டான்யுவான், அர்ஜுனன் என்றெல்லாம் பேசவும் மைக்கேல் தன் வசமிழந்தான். கண்ணென அவன் போற்றி வந்த கண்ணியத்தையும் இழந்தான் அன்றிரவு.

# விண்ணும் மண்ணும்

கி.ராஜேந்திரன்



காலையில் மயக்கம் தெளிந்ததும் தான் நடந்து கொண்ட விதத்துக்காக வெட்கப்பட்டான். இயல்பான நேர்மை உணர்வு மீண்டும் அவனை ஆட்கொள்ள அனுபமா தனஞ்செயனை விரும்பினால் அதில் குறுக்கிடத் தனக்கு என்ன அருகதையோ, அதிகாரமோ இருக்கிறது என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். கிடைத்த பதில் அவ்விருவரையும் தனியே ஓர் தொல் பொருட்காட்சிச் சாலைக்கு அனுப்பி வைத்தது.

ஆயினும் அவர்கள் அப்பால் போனதும் இப்பால் இவன் இதயம் இவனை வாட்டி எடுத்தது. ஹோட்டல் அறையில் தனியே அடைந்து கிடந்தவன் அவர்கள் சித்திரச்சாலையில் கைகோத்துக்கொண்டு நீள நடப்பதாகவும், ஓவியங்களைப் பார்க்க மறந்து ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருப்பதாகவும், கண்களில் மலர்ந்த சிரிப்பு அதரங்களிலும் விகசித்துப் பின்னர் உடல் முழுவதுமே பரவுவதாகவும், அந்தச் சிலிர்ப்புடன் கூடிய சிரிப்பின் உச்ச கட்டத்தில் அவர்கள் இன்னும் நெருங்கி வந்து ஒருவரை யொருவர் தாங்கி நிற்பதாகவும் கற்பனை செய்துகொண்டு தவித்தான்.

இவ்வாறு மனக்கண் முன் தோன்றிய காட்சிகள் அவனை வருத்திக் கொண்டிருந்தபோது அனுபமாவிடம் அவன் குறிப்பிட்டிருந்த ''நண்பன்'' வந்து சேர்ந்தான். தனஞ்செயன் சந்தேகித்து அனுபமாவிடம் கூறியதுபோல் அந்த ''நண்பன்'' உண்மையில் எஃப். பி. ஐ. பேர்வழியேதான். நியூயார்க்கிலிருந்து பறந்து வந்திருந்தான், மைக்கேலைச் சந்திக்க.

''ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி அவர்களை அனுப்பி விட்டாய் அல்லவா?'' என்று கேட்டான் அவன் வந்ததும் வராததுமாக. ''உன்னிடம் தனிமையில் பேச வேண்டும் எனக்கு என்று ஃபோனில் சொன்னேனே?''

''சாக்குப் போக்கு எதற்கு? உண்மையான காரணமே இருக்கிறது. தாங்க முடியாத தலைவலி. ஹாங் ஓவர்.''

''அளவுக்கு மீறிக் குடிக்கக் கூடியவனல்லவே நீ?'' என்றான் வந்தவன், பரிவுடன்.

''உன்னைப் போன்றவர்கள் வந்து என் மனத்தைக் குழப்பிப் படாத பாடு படுத்திவிடுகிறீர்கள். அதனால் தான் மதுவின் துணையை நாட வேண்டியிருக்கிறது'' என்றான் மைக்கேல் கடுமையாக. ''இப்போது மறுபடியும் எதற்கு வந்திருக்கிறாய்?''

''என் பழைய கோரிக்கையைப் புதுப்பிக்கத்தான்.''

''உன் ஊகமெல்லாம் தவறு என்பது தான் நிரூபணமாகி விட்டதே!''.

''அப்படிச் சொல்வதற்கில்லை. எங்களுக்குத் தனஞ்செயன் மேல் ஏற்பட்ட சந்தேகம் முழுமையாக நீங்கவில்லை. அவன் இவ்வளவு திறம்பட ஹைஜாக்கர்களைச் சமாளித்து வெற்றி கண்டதே அவன் ஓர் ஒற்றனாயுமிருக்கலாம் என்ற எங்கள் எண்ணத்தை வலுப்படுத்துகிறது.''

''உங்கள் ஊகத்தை உடைப்பிலே போடுங்கள்.. அவன் கல்லூரியில் படிக்கையிலேயே கராட்டே பயின்றவன். அதோடு தைரியசாலி.''

''இருக்கட்டும். நீ நினைப்பது போல் எங்களுக்குக் கிடைத்த ஃபோன் செய்தி பால் ஸ்மித், ஜிம்கார்ட்டர் பற்றி எச்சரிக்கை வந்ததாகவே இருக்கட்டும். அந்தப் பாகிஸ்தானியக் கைக்கூலிகளின் நோக்கம் தற்போது தவிடுபொடியாகி விட்டது, தனஞ்செயனின் துணிச்சலால் என்றே வைத்துக் கொள்வோம். ஆயின் பாகிஸ்தான் இந்தியாவிலிருந்து எவ்வளவு தூரம்? அளப்பரிய காதல் தரும் துயர எழிலைத் தாஜ்மகாலில் பார்த்து மனம் நெகிழும் போதோ, அல்லது கட்டுக்கடங்காத காதல் அளிக்கும் இன்ப அழகைக் கொனாரக்கிலே நீ கண்டு களிக்கும் போதோ உன்னை மீண்டும் ஆபத்து அணுகாது என்பது என்ன நிச்சயம்? மறுபடியும் இத்தகைய முயற்சி — உன்னைக் கடத்திக் கொண்டு போகும் முயற்சி நடைபெறாது என்று எப்படி உறுதியாகச் சொல்ல முடியும்?''

''இதோ பார்! என்னை நீ பலவந்தமாகத் தடுத்து நிறுத்தினால் ஒழிய நான் போகாமல் இருக்க மாட்டேன். ஒன்று, என்னைக் கைது பண்ணி அமெரிக்காவுக்கு அழைத்துப் போ. இல்லையெனில் பிரெஞ்சுப் போலீசுக்கு எங்களை இந்தியா போக அனுமதிக்கலாம் என்பதாகப் பச்சைக் கொடி காட்டு. அனாவசிய காலதாமதம் பண்ணாதே!''

''நீ ஒத்துழைக்க மறுக்கும்போது நான் என்ன செய்ய முடியும்? செத்துப் போன இருவர் குறித்து ஒரு சொட்டுக் கண்ணீர் சிந்தத் தேடிப் பார்த்தால் கூட ஓர் ஆன்மா அகப்படாதபோது

தனஞ்செயனைத்தான் என்ன காரணம் கூறி நான் தொட முடியும்? போய் வாருங்கள்'' என்ற அந்த எஃப். பி. ஐ. அதிகாரி ஒரு விநாடி தாமதித்துவிட்டுத் தொடர்ந்தான்: ''ஆனால் ஒன்று. ஒருவேளை உன் கருத்துத் தவறாயிருந்து, எங்கள் ஊகமே சரியானதாக இருந்தால் அப்போது இந்தப் பெட்டி உனக்குப் பயன்படும்.''

இவ்வாறு சொல்லி மூக்குப் பொடி டப்பி அளவினதான அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய தங்க நிறப் பெட்டி ஒன்றை மைக்கேலிடம் தந்தான் அவன். மைக்கேல் அதை வாங்கித் திறந்தான். உள்ளே இரண்டு மாத்திரைகள் இருந்தன.

''என்ன இவை?''

''ஸயனைட். உனக்கு ஒன்று, அனுபமாவுக்கு ஒன்று. ஒருவேளை ராக்கெட் விஞ்ஞான ரகசியங்களை நீ வெளியிட வேண்டும் என்பதாக வற்புறுத்தப்பட்டால் — சித்திரவதைக்கு உள்ளாவோம் என்று தோன்றினால் — அவளுக்கு ஒன்றை அவள் அறியாதவாறு காப்பியிலோ விஸ்கியிலோ கலந்து கொடுத்துவிடு! மற்றொன்றை நீ விழுங்கிவிடு! இந்த மாத்திரைகள் சித்திரவதைக்






கொடுமையை உணரா திருக்கவும் உதவும்; தேசத் துரோகிகளாக நீங்கள் மாறுவதையும் காக்கும்!''

மைக்கேல் வைத்த கண் வாங்காமல் அந்த எமதூதர்களைப் பார்த்துப் பிரமித்துக் கொண்டிருக்கையில் அவற்றை அவன் கையில் வைத்தவன் திரும்பி நடந்து மறைந்து விட்டான்?

## 36. காதல் மன்னனா? காதல் கணவனா?

மாலைப் பொழுது நெருங்கும் வேளையில் ஹோட்டலின் பன்னிரண்டாவது மாடிக்கு மேல், கூரையில் அமைந்திருந்த நீச்சல் குளத்துக்கு அருகில் இருந்தான் மைக்கேல். அங்கே அளவான பூங்காவும் உண்டு. குளிருக்கு இதமாக இலேசாக உஷ்ணப்படுத்தப்பட்ட ஸ்விம்மிங்பூல். அதில் மூழ்கிக் குளிக்கும் நோக்கில் வரவில்லை மைக்கேல். தலைவலி நீங்கத் தூய திறந்த வெளிக் காற்று உதவும் என நம்பியும் மனவலி குறைய மாறுதலான சூழலை நாடியும்வந்திருந்தான். குளத்தின்அருகே போடப்பட்டிருந்த பல மேஜை நாற்காலிகளுள் ஒன்றில் அமர்ந்து காப்பி கொண்டுவரச் சொன்னான். ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு சாய்ந்தான்.

எஃப். பி. ஐ. அதிர்ச்சி வைத்தியம் என்கிற தன் கடைசி அஸ்திரத்தையும் பிரயோகித்து விட்டது என்பது அவனுக்குப் புரிந்தது. விஷ மாத்திரைகளைக் கையில் வாங்கிய பிறகாவது அவர்கள் நிலைமையை எவ்வளவு கவலையோடு நோக்குகிறார்கள் என்பதை உணர்ந்து கொண்டு அதனால் கலவரமும் அடைந்து அவன் பயணத்தை ரத்து செய்வான் என்று எதிர்பார்க்கிறார்கள். ஆனால் அவன் அவ்வாறு செய்யப் போவதில்லை. அனுபமா அவர்கள் நினைப்பது போல் தேசத் துரோகி இல்லை. தனக்கு ஆசை காட்டி மோசம் செய்கிறவள் இல்லை என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றித் தனக்குத் தானே அவன் உறுதிப்படுத்திக்கொள்ள விரும்பினான். இந்தியாவுக்கு அவனுடனே அவள் விருப்பப்படி செல்வதாலன்றி வேறு எந்த விதத்தில் அவனால் அவளைப் பற்றிய உண்மையை அறிய முடியும்? அவள் தூய்மை நிரூபணமாகும்போது தன் மனம் குதூகலமடையும்!

இரவில் அவளிடம் தகாத முறையில் நடந்து கொண்டதால் ஏற்பட்ட குற்ற உணர்வும் அவனை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தது. எனவே, 'இந்தியாவுக்குச் சென்று சுற்றிப் பார்க்க வேண்டும், அதற்குத் துணையாக மைக்கேல் வரவேண்டும்' என்ற அவள் ஆசையைப் பூர்த்தி செய்து அப்போது நடந்து கொள்ளும் விதத்தால் அவள் நன்மதிப்பை மீண்டும் பெற வேண்டும் என்ற ஆவலுடன் அவன் இருந்தான். இந்த இரண்டு விதமான எண்ணங்களுடன் மூன்றாவதாக ஒரு நினைப்பும் எழுந்து துயரங்களைத் துடைத்தெறிந்து கொண்டிருந்தது. 'இனி எஃப். பி. ஐ. தலையீடு இராது. பிரஞ்சுப் போலீஸின் தடையுத்தரவு நீங்கும். பயணத்தைத் தொடரலாம். இன்னும் ஒரே ஒரு நாள்தான். பம்பாயைச் சென்றடைந்துவிடலாம். பிறகு தனஞ்செயன் பிரிந்து விடுவான். டில்லி போய்விடுவான்! அனுபமாவும் நானும் தனித்து விடப்படுவோம். இந்தியாவில் சுற்றுலாவைத் தொடங்குவோம். அப்புறம் தனஞ்செயனின் கவர்ச்சி, அனுபமாவின் கிறக்கம், என்னுடைய பொறுமை எதற்குமே இடமில்லை!'

அதை எண்ணியபோது மைக்கேல் ஆனந்த பரவசம் அடைந்தான். 'அனு! அவன் இந்தியனாய் இருப்பதாலும், ஆணழகனாய் விளங்குவதாலும் உனக்கு

# அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில், மதுரை



## அஷ்டபந்தன, சுவர்ண பந்தன

# மகா கும்பாபிஷேகம்

**26-6-1974 புதன்கிழமை**

**காலை 6 மணிக்குமேல் 7-15 மணிக்குள்**

அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் பெரு மங்கள நன்னீராட்டு விழா (கும்பாபிஷேகம்) நடைபெற்று பதினோராண்டுகள் ஆகின்றன. அருள்மிகு மீனாட்சி அம்மன் சுவர்ண பந்தன தகடுகளைப் புதுப்பித்து அஷ்டபந்தன, சுவர்ண பந்தனம் செய்யவும் திருக்கோயில் மேல்தளங்களுக்கு தட்டோடு (Pressed Tiles) போட்டுப் புதுப்பித்தும், கோபுர கலசங்களில் பழுதடைந்தவைகளைப் புதுப்பித்தும், திருமதில்களைச் சுற்றிலும் புதிதாக வேலி அமைத்தும (Railing Garden) பன்னிரண்டாவது ஆண்டில் அம்மன் சுவாமி மற்றும் எல்லா பரிவார தேவதைகளுக்கும் அஷ்ட பந்தனம் செய்து, ஆனந்த ஆண்டு ஆனி மாதம் 12-ஆம் நாள் புதன்கிழமை (26-6-1974) காலை 6மணிக்கு மேல் 7-15 மணிக்குள் பெருமங்கள நன்னீராட்டு (மகா கும்பாபிஷேகம்) செய்ய திருக்கோயில் அறங்காவலர் குழு தீர்மானம் செய்திருக்கின்றது.

ஆகவே அதற்கான திருப்பணி வேலைகள் ரூ. 10 லட்சம் செலவில் நடைபெறுகின்றன. திருப்பணிக்கு நிதி வாரி வழங்கி அங்கயற்கண்ணி, ஆலவாய் அண்ணல் அருள்பெறுமாறு வேண்டுகிறோம். திருப்பணி நன்கொடை தொகைகளுக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. திருப்பணி நன்கொடைகளை திருக்கோயில் நிர்வாக அதிகாரிக்கு நேரிடையாகவும், கீழ்க் குறித்த வங்கிகள் மூலமாகவும் அனுப்பலாம். சுவர்ண பந்தனத்துக்கு தங்கக் காணிக்கை செலுத்தலாம்.

1. ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா
2. இந்தியன் ஓவர்சீஸ் பாங்க்
3. இந்தியன் பாங்க்
4. பாங்க் ஆப் இந்தியா
5. தேனு பாங்க்
6. பாங்க் ஆப் மதுரை
7. பாங்க் ஆப் பரோடா
8. சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா
9. மதுரை மாவட்ட கூட்டுறவு மத்திய வங்கி
10. இராமநாதபுரம் மாவட்ட கூட்டுறவு மத்திய வங்கி

கும்பாபிஷேகத்தை ஒட்டி வெளியிடப்படவிருக்கும் மலருக்கு வணிகப் பெருமக்கள் தங்கள் விளம்பரங்களை அளித்து ஆதரவு தர வேண்டுகிறோம்.

**கட்டண விகிதம் : உள் முழுப் பக்கம் ரூ. 1,000 - உள் அரைப் பக்கம் ரூ. 500**

**என். எஸ். இராமச்சந்திரன்**, பி.ஏ.பி.எல்.
உதவி ஆணையர் — நிருவாக அதிகாரி

**திரு எல். நாராயணன் செட்டியார்**
அறங்காவலர் குழுத் தலைவர்

,, **என். பொன்னப்பன்**
,, **டி. தியாகையா**
,, **ஆர். கோபால்சாமி**
,, **கே. எஸ். இராமகிருஷ்ணன், எம்.எல்.ஏ.**
அறங்காவலர்கள்



ஏற்பட்ட மனத் தடுமாற்றத்தை மறந்து மன்னித்து விடுகிறேன்' என்று கூறிக் கொண்டான் அவன். 'அந்த மோகம் தாற்காலிகமானது என்பது எனக்குத் தெரியும். அது காதலாகாது, ஆக முடியாது. அவனுக்கும் உனக்கும் எந்த விதத்திலும் பொருத்தமில்லை என்பதை நீயே வெகு சீக்கிரம் புரிந்துகொண்டு விடுவாய். அவன் வியாபாரி, நீ விஞ்ஞானி என்பது காதலுக்குத் தடையில்லை. ஒரு விஞ்ஞானி மற்றொரு விஞ்ஞானியைத்தான் காதலிக்க வேண்டும் என்ற கட்டாயமுமில்லை. சந்திரன் பூமியைக் காதலித்து அதைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும்போது பூமியானது சூரியன்மேல் அளப்பரிய ஆசை வைத்து அதைச் சுற்றி வந்து கொண்டிருப்பதில் என்ன பொருத்தம் இருக்கிறது? அதே சூரியன் மேல், வேறு ஐந்தாறு கிரகங்களும் அடங்காத மோகம் கொண்டு அதனைச் சுற்றி வருவதில் என்ன அர்த்தம் இருக்கிறது? காதல் வசதிகளைப் பார்த்துக்கொண்டு, நல்லது கெட்டதைக் கவனித்துக் கொண்டு, மற்றவர்களுடைய சௌகரியங்களை உத்தேசித்துக் கொண்டு ஏற்படுவது அல்ல. இதையெல்லாம் நான் உணர்ந்திருக்கிறேன் அனு. ஆனால், காதல் இரு மனங்கள் ஒன்றுவதுடன் முடிந்துவிடுகிற காரியமல்ல என்பதையும் அறிந்திருக்கிறேன். திருமணம், குழந்தைகள், குடும்பம் என்றெல்லாம் ஏற்பட்டு, மகிழ்ச்சிகளையும் துயரங்களையும் பகிர்ந்து கொண்டு, பரவசமடைந்து, ஆறுதல் பெற்று வாழ்க்கை நடத்தும்போதுதான் காதல் கனிந்து பூரணத்துவம் பெறுகிறது. அந்த நிறைவைத் தனஞ்செயன் உனக்கு எப்படி அளிக்க முடியும்? ஒரு காஸனோவா அல்லது ஒரு டான்யுவான் அல்லது ஓர் அர்ஜுனன் காதல் மன்னனாக விளங்கலாம்; காதல் கணவனாக இருக்க முடியாது! சாகஸங்கள் புரியலாம்; பாதுகாப்பை, நிம்மதியைத் தர முடியாது. இதையெல்லாம் நீ யோசிக்காமலா இருந்து விடுவாய் அனு?'

இத்தகைய எண்ணங்களால் மைக்கேல் உற்சாகமே அடைந்து விட்டான்.

அதே சமயம் அனுபமாவும் தனஞ்செயனும் வருவதை அவன் கண்கள் கவனித்தன. கையசைத்து அவர்களுக்குத் தான் இருக்கும் இடத்தை உணர்த்தி அழைத்தான்.

அருகில் வந்ததும், ''உடம்பு தேவலாமா?'' என்று அனுபமா கேட்டாள்.

''ஓ! திறந்தவெளிக்கு அதற்காகவே வந்தேன்.''



அமெரிக்காவில் ப்ளாரிடா மாநிலத்தில் உள்ள ஓர் ஊரில் பூனைக்கு மணி கட்டி வைக்க வேண்டும் என்று சட்டம் இருக்கிறது. பறவைகளைப் பாதுகாக்க இந்த நடவடிக்கை. நியூ டைம்ஸ்—பாலி

XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX

''உங்கள் நண்பர் போய்விட்டாரா?'' என்று தனஞ்செயன் கேட்டான்.

''உம்.''

''யார் அவர்?'' என்றாள் அனுபமா.

''சென்ற முறை நான் பாரிஸுக்கு வந்தபோது அறிமுகமானவன். சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுத் திரும்பினான்.''

'எதற்காகப் பொய் சொன்னோம்?' என்று அடுத்த கணமே மைக்கேல் யோசித்தான். புரியவில்லை. நியூயார்க்கில் எஃப். பி. ஐ. தனது ஜாகைக்கு வந்து போனதாகத் தெரியப்படுத்திய பிறகு, இங்கே பாரிஸிலும் அவர்களில் ஒருவன் தொடர்ந்து வந்து பேசியதாகவும் அவன் வேண்டுகோளைத் தான் ஏற்காததாகவும் கூறியிருக்கலாம்தான். அதனால் ஒன்றும் குடி மூழ்கிப் போய்விடப் போவதில்லை. என்றாலும் அவ்விருவரும் ஒருசேர வருவதைப் பார்த்ததுமே சற்று முன் ஏற்பட்ட உற்சாகமெல்லாம் கரைந்து போய்த் தன்னை ஏதோ மூன்றாம் மனிதன் போலக் கருதத் தொடங்கி விட்டான் மைக்கேல்.

''அது சரி, நீங்கள் நீச்சல் உடையில் இல்லையே ?'' என்றாள் அனுபமா. ''அவர்கள் வந்தால் 'நீச்சல் குளத்தின் அருகில் நான் இருப்பதாகச் சொல்லுங்கள்' என்று ரிஸப்ஷனில் கூறிவிட்டு வந்தீர்களாமே?''

''அதனால் அவரவர் அறைக்குச் சென்று நீச்சல் உடைகளை எடுத்து வந்தீர்களா?'' என்று அவர்கள் தோள்களில் தொங்கிய பைகளைப் பார்த்து விட்டுப் புன்னகையுடன் கேட்டான் மைக்கேல். ''நீங்கள் நீரில் இறங்குங்கள். நான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறேன்.''

''வேண்டாம்; எனக்கும் இப்போது அதில் நாட்டமில்லை. வம்பளந்து



'எனக்கு ஒரு மனைவி வேண்டும்' என்று ஒருவன் விளம்பரம் செய்ய 'என் மனைவியை எடுத்துப் போங்கள்' என்று 200 பேர் கடிதம் எழுதினார்களாம். பயப்படாதீர்கள். இது ஓர் அமெரிக்க ஜோக். —பாபு

XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX

கொண்டிருக்கலாம்'' என்று அனுபமா கூறி இன்னொரு நாற்காலியில் அமர்ந்தாள்.

மைக்கேல் இதனால் ஆறுதல் அடைந்தவனாக நன்றி பொங்க அவளைப் பார்த்தான்.

தனஞ்செயன் உடை மாற்றிக்கொள்வதற்கான அறைகளை நோக்கி நடந்தான்.

''நீங்கள் லூவ்ருக்கு வந்திருக்கலாம். ரொம்பவும் அனுபவித்திருப்பீர்கள்'' என்றாள் அனுபமா.

''அங்குள்ள எந்த வண்ண ஓவியம் தான்' இங்குள்ள உயிரோவியத்துக்கு ஈடாகும்?'' என்று கேட்டு அவள் கரத்தைப் பற்றினான் மைக்கேல்.

அனுபமா சிரித்தாள். ''மேனாட்டவரின் நாகரிக முன்னேற்றம் அதிகமாக ஆக ஒருவருக்கொருவர் பாராட்டுரைகளை அள்ளி வீசிக் கொள்வது சர்வ சாதாரணமாகி விட்டது'' என்றாள்.

''வாஸ்தவம்'' என்றான் மைக்கேல். ''அதனால் சில சமயம் மனப்பூர்வமாகப் பேசப்படுவது கூட மதிப்பிழந்து போகிறது; நகைச்சுவையாகிறது.''

அவள் சிரிப்பதை நிறுத்திவிட்டுத் தலைகுனிந்தாள். சுயவெறுப்பு அவள் நெஞ்சை நிறைத்தது. ''தாங்க்யூ, மைக்!'' என்ற சொற்கள் நன்றியிலே தோய்ந்து துயரில் முக்குளித்து வெளி வந்தன.

''அனு! என்னை மன்னித்துவிடு! நான் நடந்து கொண்ட விதம் அருவருக்கத் தக்கது'' என்று மைக்கேல் கூறிய போது, ''நான் செய்யும் மோசடியை விடவா?'' என்று கேட்கத் துடித்த நாவுக்கு அவள் தடையுத்தரவு பிறப்பித்துவிட்டு, அவன் அதரங்கள் மீது ஒரு விரலை வைத்தாள். ''வேறு ஏதாவது பேசுவோம்'' என்றாள்.

''ஏற்கெனவே உன்னை அடையும் முயற்சியில் நான் முன்னேற்றம் காண முடியாமல் தவிக்கும்போது இரவில் நிகழ்ந்தது மேலும் ஒரு முட்டுக்கட்டையாகிறது, அனு! எங்கோ அண்டப் பெரு வெளியில் விரையும் ராக்கெட்டைத் திசை திருப்பும் விஞ்ஞானத்தில் நான் நிபுணன். ஆனால் உனது உள்ளத்தை என் பக்கமாகத் திசை திருப்பும் கலை எனக்குக் கைவரவில்லை! உண்மையைச் சொல், அனு! தனஞ்செயனிடம் உன் இதயத்தை நீ பறி கொடுத்து விட்டாயா?''

''இல்லை, இல்லவே இல்லை'' என்றாள் அனுபமா, கண் கலங்கி. ''என்னை மன்னித்து விடுங்கள். என் போக்கிலே காணப்படும் அசட்டுத் தனங்களை, சிறுமைகளை அலட்சியப் படுத்தி விடுங்கள். மைக்! என்னை நானே புரிந்துகொள்ள ஒத்துழைத்து உதவுங்கள். உங்களை நான் விரும்பி ஏற்கும் அளவுக்கு என் மனம் பக்குவமடையும் வரையில் பொறுமையுடன் காத்திருங்கள்!''

'எத்தனை காலம்' என்று தனக்குள் கேட்டுக் கொண்டு பெருமூச்செறிந்தான் மைக்கேல்.

தனஞ்செயன் டிரஸ்ஸிங் கவுன் அணிந்து அவர்கள் அருகே வந்தான். ''அனு! வெய்ட்டர் வந்தால் எனக்கு ஒரு பீருக்கு ஆர்டர் கொடுத்துவிடு. ஒரு 'டைவ்' அடித்துவிட்டு வருகிறேன்'' என்று கூறி மெல்ல, நிதானமாக இடுப்பில் போட்டிருந்த பட்டை முடிச்சை அவிழ்த்து, டிரெஸ்ஸிங் கவுனைத் தோள்களிலிருந்து சரிய விட்டான்.

படமெடுத்தாடும் நாகப் பாம்பின் வடிவத்தில் அவன் மார்பு தோள்களில் விரிந்து, இடையை நோக்கிச் சரிந்து இறங்கிக் குறுகியது. நீடித்த உடற்பயிற்சியால் முறுக்கேறிய தசைநார்கள் சிறிய சிறிய அலைகளாகப் புடைத்தெழுவதும் அடங்குவதுமாக இருந்து அந்த மேனிக்குப் பளபளப்பூட்டின.

ஒரு புன்னகையை உதிர்த்துவிட்டு, அவன் 'டைவிங் போர்ட்' நோக்கி நகர்ந்தான். நீச்சல் உடையுடன் அவன் நின்றபோதும் நடந்தபோதும் பல தலைகள் அவன் பக்கமாகத் திரும்பின என்பதை மைக்கேல் கவனித்தான். அதோடு, அனுபமா மிகுந்த பிரயாசைப்பட்டும்கூடக் கண்களை அந்தப் பரந்த நெஞ்சத்திலிருந்து அகற்ற முடியாமல் சிரமப்படுகிறாள்; தான் அருகில் இருப்பது கூட அவளுடைய அந்த முயற்சிக்கு உதவவில்லை என்பதையும் மைக்கேல் உணர்ந்தான். அந்திகால வானம் மட்டுமல்ல, தன் மனமும் இருண்டுகொண்டு வருவதாக அவனுக்குத் தோன்றியது. (தொடரும்)

# மக்கள் நம்பிக்கை என்னும் இனிதான சுமையை மகிழ்வுடன் ஏற்று செயல்படுவதே எங்கள் குறிக்கோள்.





60 ஆண்டு காலமாக உழைத்து உழைத்து நாங்கள் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகியிருக்கிறோம்.

எனவேதான் சிறிய பார்சல்கள் முதல் பெரிய பார்சல்கள் வரை நாங்கள் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்ப்போம் என்ற நம்பிக்கை மக்களுக்கு இருக்கிறது.

இந்த நம்பிக்கைக்கு அடிப்படை இவைதான்:

- எங்கள் லாரிகள் அனைத்தும் எங்களுக்குச் சொந்த மானவையே. எனவே காத்திருக்க வேண்டிய அவசியமில்லை.
- அதிக அளவில் பார்சல்களை ஏற்றிச் செல்ல நிறைய டிரெய்லர்களும் எங்களிடம் உண்டு. எனவே காத்திருக்கத் தேவையில்லை.
- லாரிகளில் பழுதேற்பட்டால் வழித் தடங்களில் அமைந் துள்ள எங்கள் பட்டறைகள் உடனடியாகச் சீர் செய்கின்றன. எனவே தாமதம் தவிர்க்கப்படுகிறது.
- ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நேரிடையான பார்சல் சர்வீஸ் இருப்பதனால் நேரம் மிச்சப்படுகிறது. பார்சல்கள் இறக்கி ஏற்றப்படுவது தவிர்க்கப்படுவதால் சேதமும் விளைவதில்லை.
- தென்னகத்தின் பெரு நகரங்களுக்கிடையே மின்னல்வேக சர்வீஸ்களும் நடத்துகிறோம். எனவே உங்கள் பொன்னான நேரம் மிச்சப்படுகிறது.




உங்கள் நம்பிக்கைக்குரியது டிவிஎஸ்

## ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட்

(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
மதுரை



# ஆசைகள் மடிவதில்லை

19

கதை: கௌசிகன்

சித்திரம்: சூர்யா...


















தருமராஜனோட தயவிலே இருக்கும் போது என்னாலே ஏதும் செய்ய முடியாததோட என் போலீஸுக்கும் அபாயம் வரும்னு....

கவலைப்படாதீங்க! கலியபெருமாள் நான் தருமராஜனைச் சந்திச்சு விஷயத்தை ஒரு விதமா முடிச்சுடறேன். போதுமா?

பதவி வெறி கொண்ட நந்தகோபால் அன்றிரவு தருமராஜனைச் சந்திக்கிறான்.

அடே...டே! நீங்களா? எப்போ, எப்படி வந்தீங்க?

உங்களை எதிர்பார்த்துக்கிட்டு ரொம்ப நேரமாகக் காத்திருக்கேன் தருமராஜன்.

மிஸ்டர் நந்தகோபால்! இந்தக் காலத்தில் யார் யாரோ எப்படி யெப்படியோ சமூகத்தின் மேல் மட்டத்துக்கு உயர்ந்து பெரிய மனிதர்களைப் போலப் பொது மக்களை நம்ப வைத்து விடுகி றார்கள். நீதிபதி பதவி வகிப்ப வர்களுக்குச் சில தகுதிகள் வேண்டும். கண்டவர்களெல்லாம் அமர்ந்து விடக் கூடிய பதவியல்ல அது.....

நான் கண்டவனா...? தகுதியில்லாதவனா?

அப்படி நான் சொல்லவில்லை. உங்களைப் பற்றி எனக்குக் கிடைத்திருக்கும் தகவல்களின் படி இப்போது நீங்கள் வகிக் கும் பதவிக்குக் கூடத் தகுதியில்லாதவர்..

... உங்களைப்பற்றிய அபிப்பி ராயங்களை அனுப்பும்படி அர சாங்கம் கேட்டிருக்கிறது. நான் எதையும் மறைக்க விரும்ப வில்லை. ஒரு நாட்டின் ஆரோக் கியத்துக்குப் பொது மக்களின் நல் வாழ்வு தான் முக்கியம். இது விஷயமாக நீங்கள் என்னைச் சந்திப்பதில் பயனில்லை.

வாக்குவாதம் விபரீத எல்லைக்குப் போகிறது. சமூகத்தின் பார்வைக்குத் தன் சுய உரு வத்தை வெளிச்சம் போட்டுக் காட்டப் படுவதை விரும்பாத நந்தகோபால்....

டுமீல்... டுமீல்...!

ஆ.. ஐயோ.. பாவி...

தொடரும்

# கருப்பை வாழ்த்துவோம்



பாத்திரங்கள் :

**ரகு — கதாநாயகன்**
**கணேஷ் — ரகுவின் நண்பன்**
**நிர்மலா — ரகுவின் மனைவி**
**சுஜாதா — நிர்மலாவின் தோழி**

**காட்சி—1**

(கணவன், மனைவி இருவரும் ஒன்றாக அலுவலகத்திலிருந்து வீடு திரும்புகிறார்கள். கதவைத் திறந்ததும் கீழே தரையில் கிடந்த இரு கடிதங்களையும் ஆளுக்கு ஒன்றாக எடுத்துப் படிக்கிறார்கள்.)

ரகு (வாய்விட்டுப் படிக்கிறான்): சிரஞ்சீவி ரகுவுக்கு, அநேக ஆசீர்வாதம். இங்கு யாவரும் சௌக்கியம். இப்பவும் சௌ. கமலாவுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறேன். உடனடியாக இப்போது இரண்டாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது. உனக்கும் நிர்மலாவுக்கும் போனஸ் வந்திருக்குமே ! உடனே அனுப்பவும். மற்றவை பிறகு. அவசரம். **அப்பா.**

ரகு: உனக்கு யார் எழுதியிருக்கிறார்கள் ? எனக்கு அப்பா எழுதியிருக்கிறார்.

நிர்மலா: என் தம்பி.

ரகு: என்னவாம் ? அழுகைதானே ?

நிர்மலா: வேலை கிடைக்கும் போல் இருக்கிறதாம். ஆனால் இரண்டாயிரம் ரூபாய் 'டெபாசிட்' கட்ட வேண்டுமாம்.

ரகு: பணம் அனுப்பச் சொல்லி எழுதியிருக்கிறான். அப்படித்தானே ?

நிர்மலா: உங்களுடைய அப்பா பணம் அனுப்பப் போவதாக எழுதியிருக்கிறாரோ ?

ரகு: அதிகப்பிரசங்கி. மூடு, வாயை. அவர் ஒன்றும் உரிமை இல்லாத இடத்தில் கேட்கவில்லை. ஞாபகம் இருக்கட்டும்....

நிர்மலா: இருக்கிறது...இருக்கிறது...

ரகு: என்ன இருக்கிறது?

நிர்மலா: என் தம்பிக்கும் என்னிடத்தில் பணம் கேட்க உரிமை இருக்கிறது.

ரகு: அதுதான் கிடையாது என்றேன். கல்யாணம் செய்து கொடுத்த பின்பு பெண்ணிடத்திலிருந்து எதையும் எதிர்பார்க்கப் பெற்றோர்களுக்கோ அண்ணன் தம்பிகளுக்கோ எந்தவிதமான உரிமையும் கிடையாது. நினைவிலிருக்கட்டும்.

நிர்மலா: அப்படி எதிலும் எழுதி வைத்திருக்கவில்லை.

ரகு: வைத்திருக்கிறது.

நிர்மலா: அது பெண்கள் வேலைக்குப் போக முற்படாத காலத்து நடைமுறையாக இருக்கும்.

(அவள் உள்ளே போகிறாள்.)

ரகு: அநாவசியமான பேச்சு தேவையில்லை. நாளைக்கே என் அப்பாவுக்கு இரண்டா

யிரம் ரூபாய்க்கு 'டிராப்ட்' வாங்கி அனுப்பப் போகிறேன்.

## காட்சி—2

(நிர்மலாவின் அலுவலகம். நிர்மலாவும் சுஜாதாவும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.)

சுஜாதா: உடம்பு சரியாக இல்லையா, நிர்மலா! ஒரு மாதிரியாக இருக்கிறாயே!

நிர்மலா: மனசே சரியாக இல்லை சுஜாதா.

(குரல் தடுமாறுகிறது.)

சுஜா: என்ன விஷயம்?

நிர்மலா: நேற்று என் தம்பி கடிதம் எழுதியிருக்கிறான். ஒரு வேலை கிடைக்கும்போல் இருக்கிறதாம். இரண்டாயிரம் ரூபாய், 'டிபாசிட்' கட்ட வேண்டுமாம். கேட்டு எழுதியிருக்கிறான்.

சுஜா: அனுப்புவதுதானே! உனக்கும் உன் கணவருக்கும்தான் போனஸ் வந்திருக்கிறதே!

(நிர்மலா விரக்தியாகச் சிரிக்கிறாள்.)

சுஜா: ஏன்?

நிர்: பெண்களுக்குச் சம்பாதிக்க மட்டும் தான் உரிமை உண்டு, சுஜாதா! செலவழிக்க உரிமை கிடையாது. என் சம்பாத்தியத்தைச் செலவு செய்யவே எனக்கு உரிமை இல்லாத போது — என் கணவரின் போனஸ் பணத்தையும் சேர்த்து அனுப்பச் சொல்கிறாயே! நீ! .... எனக்கு அழுவதா, சிரிப்பதா என்றே தெரியவில்லை....

சுஜா: ஏன் நிர்மலா, உன் கணவர் சம்மதிக்கவில்லையா?

நிர்: போனஸ் பணம் 'டிராப்டா'க மாறி என் மாமனுருக்குப் போய்விட்டது சுஜாதா! கல்யாணம் செய்து கொடுத்துவிட்டபின் பெண்ணிடம் எதையுமே அவளுடைய பெற்றோர்கள் கேட்கக் கூடாதாம்.

சுஜா: அவரை அவருடைய அப்பா செலவழித்துப் படிக்க வைத்தது போலத்தானே உன் அப்பாவும் உனக்கும் செலவு செய்து படிக்க வைத்திருக்கிறார்கள்?

நிர்: அந்த நியாய உணர்வுகளுக்கு அவர்களிடம் இடமே இல்லை, சுஜாதா! பெண் மக்களைப் பெறுவது போன்ற கொடுமை வேறு எதுவுமே கிடையாது.

சுஜா: இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும், நிர்மலா!

நிர்: என்ன முடிவைக் கட்டுவது? எப்படிக் கட்டுவது? அறிவு வளர்ச்சிக்காகத்தான் பெண் கல்வியை வற்புறுத்தினார்கள். இப்போது என்னடா வென்றால் பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக வந்த கதையாகி விட்டது. நகைகள், பாத்திரங்கள், வரதட்சிணை என்று பெண்ணைப் பெற்றவர்களிடம் கறந்தது போதாது என்று இப்போது பெண்ணைப் படிக்கவும் வைத்திருக்க வேண்டும். அவள் என் குடும்பத்துக்குச் சம்பாதித்தும் கொடுக்க வேண்டும் என்று கேட்க ஆரம்பித்துவிட்டார்கள். இப்படிப் பெண்களெல்லாம் வேலைக்குப் போகத் தொடங்கிவிட்டதால்தான் ஆண்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துவிட்டது என்பது என் அபிப்பிராயம் சுஜாதா. அத்துடன், ஒரு வழிப் பாதை என்கிறார்களே.... அது பெண்ணைப் பெற்றவர்களுக்குத்தான் பொருந்தும் சுஜாதா. இதற்கெல்லாம் புரட்சி செய்ய எந்தப் பெண்களாவது முன்வருகிறார்களா? அவர்களுடைய புரட்சியெல்லாம் ஆடைகள் அணிவதில்தான் இருக்கிறது.

சுஜா: உன் தம்பிக்கு என்ன பதில் எழுதப் போகிறாய்?

நிர்: என்னத்தை எழுதுவது? என்ன செய்வது என்றே எனக்குத் தெரியவில்லை. இரவெல்லாம் தூங்காமல் அழுதாகி விட்டது. இப்போதும் அடக்க முடியாமல் அழுகை வருகிறது. ஆபீஸ் ஆயிற்றே..... சிரமப்பட்டு அடக்கிக் கொண்டிருக்கிறேன்.

சுஜா: நீ போட்டுக் கொண்டிருக்கிற நகைகளெல்லாம் உன் அப்பா செய்து போட்டவைதானே? இப்போது பவுன் விற்கிற விலைக்கு இதையெல்லாம் விற்றால் ஐயாயிரம் ரூபாய் தேறுமே, நிர்மலா!

நிர்: பாங்கியில் லட்சம் லட்சமாகக் கையாளுகிறார் காஷியர். ஆனால் அவற்றில் அவர் ஒரு 'கப்' காப்பி வாங்கிச் சாப்பிட அவருக்கு உரிமை உண்டா? இந்த நகைகளையெல்லாம் நான் பத்திரமாகப் பாதுகாத்து என் கணவர் கேட்கிற போது அவரிடம் ஒப்படைக்க வேண்டும். மற்றப்படி எனக்கு இதில்



## கோடை ஹாஸ்யம்-4

"அங்கே போ, இங்கே போங்க ருங்களே. பணத்துக்கு எங்கே போறதுன்னு அதை மாத்திரம் சொல்ல மாட்டேங்கருங்களே!"




எந்தவிதமான உரிமையும் கிடையாது. இது கூடவா உனக்குப் புரியவில்லை ?

சுஜா: அப்படியானால் இவர்கள் நமக்கு என்னதான் செய்கிறார்கள்?

நிர்: குழந்தையைக் கொடுக்கிறார்களே, அதுதான். அதில்கூட, பத்து மாதம் சுமக்கவும், பெறவும், வளர்க்கவும்தான் நமக்கு உரிமை. மற்றப்படி குழந்தை தகப்பனுக்குத் தான் சொந்தமாம்.

சுஜா: பெண்கள் முன்னேறிவிட்டதாகப் பேசிக் கொள்கிறார்களே... அதெல்லாம் இவ்வளவுதானா ?

நிர்மலா: உண்மையில் பெண்கள் இப்போதுதான் கசக்கிப் பிழியப்பட்டு வருகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது...ம்

(பெருமூச்சு விடுகிறாள்.)

சுஜா: என்னிடம் பணம் இருக்கிறது. தரட்டுமா ?

நிர்: வேண்டாம், சுஜாதா! பிறகு நான் அதை எப்படித் திருப்பிக் கொடுப்பது ?

சுஜா: உன் தம்பியே கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்பிக் கொடுக்கட்டுமே !

நிர்: என் கணவர் என்ன சொல்வாரோ ?

சுஜா: அவருக்குத் தெரிய வேண்டாம். நானே அனுப்புகிறேன். அவன் எனக்கே திருப்பி அனுப்பி வரட்டும். விலாசத்தைக் கொடு..... இந்தக் காலத்தில் வேலை கிடைப்பதே கஷ்டமாக இருக்கிறது. கிடைக்க இருப்பதைக் கைநழுவ விட்டுவிடுவதா ?

நிர்: என்னமோ பார்க்கலாம். மணி பத்து அடித்துவிட்டது. வேலையைக் கவனி. அப்புறம் நான் யோசித்துச் சொல்கிறேன்.

(இருவரும் தத்தம் வேலைகளில் ஈடுபடுகிறார்கள்.)

### காட்சி—3

(ரகுவின் அலுவலகத்தில்.)

கணேஷ்: என்னப்பா, ரகு! போனஸ் பணத்துக்கு என்ன வாங்கினாய்? உன் மனைவியின் போனஸையும் சேர்த்தால் இரண்டாயிரம் ஆயிற்றே !

ரகு: ஒன்றும் வாங்கவில்லை, கணேஷ் ! என் தங்கைக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது. அப்பா பணம் கேட்டு எழுதியிருந்தார். இரண்டாயிரம் ரூபாய்க்கு அப்படியே 'டிராப்ட்' வாங்கி அனுப்பிவிட்டேன்.

கணேஷ்: உன் மனைவி எப்படிடா சம்மதித்தாள் அதற்கு? அவளுடைய பங்கும் அதில் இருக்கிறதே ! என் மனைவி வீட்டில் உட்கார்ந்தபடியே என் போனஸ் பணத்துக்கு அப்படியே ஒரு ஜோடி வளையல் வாங்கிக் கொண்டுவிட்டாளடா !

ரகு: அவளை யாருடா கேட்டார்கள் ? அவளுடைய தம்பி பணம் கேட்டு எழுதியிருந்தான். அனுப்ப முடியாது என்று சொல்லிவிட்டேன்.

கணேஷ்: டேய், நீ பலே ஆளுடா.

ரகு: பின்னே ? வேலை பார்க்கிறவளை மணந்துகொண்டது வேறு எதற்காம் ?

கணேஷ்: நானும்தான் எவ்வளவோ முயற்சி பண்ணினேன். கிடைக்கவில்லையே..? எல்லாவற்றுக்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டும் அப்பனே....

ரகு! என் மனைவிக்கும் அவளுடைய தம்பிக்கு அனுப்பாமல் என் அப்பாவுக்குப் பணத்தை அனுப்பி விட்டேன் என்று ரொம்ப வருத்தம்தான். அதை நான் பொருட்படுத்தவேயில்லை. ஒரு வாரம் கொஞ்சம் அப்படியிப்படி இருப்பாள். அப்புறம் தானே சரியாகிவிடுவாள். வேறு வழி ?

கணேஷ்: பெரிய நெஞ்சழுத்தக்காரனப்பா!

ரகு: இல்லாவிட்டால் இவர்களிடம் தாக்குப் பிடிக்க முடியுமா ? சரி, சரி ! இன்று சாயங்காலம் படம் பார்க்கப் போகலாம் வருகிறாயா ?

கணேஷ்: டேய், ரகு! இந்த மாதம் நீ படத்துக்கு அறுபது எழுபது ரூபாய் செலவு செய்திருப்பாய் போலிருக்கிறதே !

ரகு: ஆகட்டுமே! நாம்ப சிக்கனமாக இருந்தால் அவளுடைய காசுக்குச் செலவு அதிகமாக இருக்காது. கையிலே காசு மிஞ்சினால் தன் பிறந்த வீட்டுக்கு அனுப்பத் தோன்றும் அவளுக்கு. அப்படியில்லாமல் அவளுடைய காசுக்குப் பற்றாக்குறையே ஏற்படுத்திவிட்டோமானால் அவளுக்குப் பிறந்த வீட்டு ஞாபகம் வராது பாரு.... அதற்காகத்தான் நான் இப்படி..... ஜாலியாக...

கணேஷ்: அப்படியா சங்கதி!

(வியப்புடன் விழிக்கிறான்.)

ரகு: இப்படி இருக்கலாமா என்று கேட்பாய்.... அதுதானே?

கணேஷ்: இருக்கலாமா என்று கேட்கவில்லையடா. இப்படி இருப்பது கூடாது என்றுதான் உனக்குச் சொல்ல விரும்புகிறேன். ரகு! ஆயிரம் இருந்தாலும் அவள் உன் மனைவி. அவள் தன்னுடைய கடமையை மட்டும் செய்து கொண்டிருக்கவில்லை, உன்னுடைய கடமையிலும் பாதியை அவள்

# சமையலறைக் குழாயில் அடைப்பா?

# எக்ஸ்பெல்

**எக்ஸ்பெல் அதை நொடியில் நீக்குகிறது.**

**அடைப்புமில்லை!**
**தொல்லையுமில்லை.**

எண்ணெய்ப் பசையும்
ஆகார துகள்களும்
சமையலறைக் குழாயை
அடைத்து அளவிலா
தொல்லையைத் தருகின்றன.
கொதிக்கும் நீரில்
எக்ஸ்பெல் கலந்து உபயோ
கித்தால் குழாய் முற்றிலும்
துப்புரவாகிறது.









பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்
BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட.

CHAITRA-BLS-47 TAM

கல்கத்தாவுக்கு வந்த ஓர் அமெரிக்க ஆறு வயதுச் சிறுமி சாலையில் திரியும் நாய்கள், பூனைகள், கன்றுக் குட்டிகள், பன்றிகள், எருமைகள் இவைகளைப் பார்த்துவிட்டு "அப்பா, அப்பா எவ்வளவு பெரிய மிருகக்காட்சிச்சாலைக்குள் வந்து விட்டோம்" என்று மகிழ்ச்சியோடு கத்தினளாம். — பாலி



ஏற்றுச் செய்து கொண்டிருக்கிறாள். அதற்காகவேனும் நீ அவளுடைய விருப்பத்தை மதிக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

ரகு: விருப்பமாவது மண்ணாங்கட்டியாவது. கணேஷ், அதெல்லாம் கதைக்கும் படத்துக்கும்தான் பொருந்தும். நிஜ வாழ்க்கைக்கு அதெல்லாம் பொருந்தாது தெரியுமா? கொஞ்சம் இடம் கொடுத்து விட்டால் பிறகு அவள் நமக்கு மிஞ்சிப் போய் விடுவாள். வேலைக்குப் போகாத பெண்களே ஆண்களின் வருமானத்தைத் தன் கையில் எடுத்து வைத்துக்கொண்டு என்ன அட்டகாசம் செய்கிறார்கள் தெரியுமா?

கணேஷ்: நீ அப்படிப்பட்ட ஒருத்திக்குத்தான் கணவனாக இருக்க வேண்டியவன். பாவம், உன் மனைவி...

ரகு: போதும் பேசாமலிருடா! நம்ப ஜாலியாக இருக்கலாம் என்றுதானே வேலை பார்க்கிற பெண்ணைத் தேடிக் கொள்ளுகிறோம்! அப்புறம் அவளுடைய வீட்டுக்கும் நாம்தான் உதவ வேண்டும் என்றால் பிறகு நாம் வேலைக்குப் போகிற பெண்ணை மணந்து கொள்வதில் அர்த்தமே இல்லை...

கணேஷ்: வசதி உள்ள குடும்பத்துப் பெண்ணாகப் பார்த்து மணந்து கொண்டிருந்தால் இத்தகைய பிரச்னைகளுக்கே இடமிருக்காது...

ரகு: வசதி குறைந்தவர்கள்தானே சமூகத்தில் பிரச்னைக்குரியவர்களாகவும் இருக்கிறார்கள்? வசதி உள்ள வீட்டுப் பெண்கள் வேலைக்குப் போவதில்லை.

கணேஷ்: அப்படியானால் நீ உன் மனைவியைக் கொஞ்சம் அநுசரித்துக்கொண்டு போ, அப்பா! இப்படி உன்னைப் போல நாலு பேர் பதினெட்டாம் நூற்றாண்டு ஆண்களைப் போல் நடந்து கொண்டால் அப்புறம் பெண்கள் திருமணத்துக்குப் பிறகு வேலைக்குப் போக மறுத்து விடுவார்கள்...

ரகு: அதெல்லாம் ஒன்றும் நடக்காது.

(கட்டை விரலை ஆட்டுகிறான்.)

## காட்சி—4

(பஸ் ஸ்டாண்டில்.)

சுஜாதா: என்ன, நிர்மலா! இன்னமும் உன் பிரச்னை தீர்ந்தபாடில்லையா?

நிர்மலா: ம்... (பெருமூச்சு) எப்படித் தீரும் சுஜாதா?

சுஜாதா: உன் தம்பிக்கு வேலை கிடைத்ததா இல்லையா?

நிர்மலா: இல்லை. உரிய நாளில் டிபாஸிட் தொகையைக் கட்டாததால் அந்த வேலை வேறு ஒருத்தருக்குப் போய் விட்டதாம்.

சுஜாதா: அட பாவமே! நான்தான் அப்பவே பணம் தருவதாகச் சொன்னேனே, நீ கேட்கவில்லை.

நிர்மலா: என்ன செய்வது சுஜாதா! என் கணவரை மீறிக் கொண்டு ஒரு காரியத்தைச் செய்ய எனக்குப் பயமாக இருக்கிறது.

சுஜாதா: நீ இப்படிப் பயந்து சாவதால் தான் உன் கணவர் உன்னை நன்றாக ஏமாற்றுகிறார்.

நிர்மலா: இன்னொரு விஷயம் சுஜாதா! என் மாமனார் இன்னொரு மூவாயிரம் ரூபாய் உடனே அனுப்பச் சொல்லி எழுதியிருக்கிறார்.

சுஜாதா: போடு சக்கைன்னானாம்! அனுப்பி விட்டீர்களா?

(கேலியாகக் கேட்கிறாள்.)

நிர்மலா: இனிமேல்தான் அனுப்ப வேண்டும். கையில் பணமில்லை. என்னுடைய பிடிப்புப் பணத்திலும் கடன் வாங்க மனுச் செய்திருக்கிறார்.

சுஜாதா: அடி பைத்தியக்காரி! நீயும் அதற்குச் சம்மதித்து விட்டாயா?

நிர்மலா: சம்மதிக்காமல் என்ன செய்ய முடியும் சுஜாதா! ஒரு பெண் கணவனின் சந்தோஷத்துக்காகத் தன்னையே அழித்துக் கொள்ளும் ஊதுபத்தியைப் போன்றவள் தானே...? கையெழுத்துப் போடு என்றால் போட்டுத்தானே ஆக வேண்டும்?

சுஜாதா: கோபித்துக் கொள்வதோடு நிறுத்திக் கொண்டு விட்டாயாக்கும்?

நிர்மலா: கோபம்! அதற்குக்கூட உரிமை இருக்கிறதா என்ன! ஏதோ வாழ வேண்டிய கட்டாயம்... வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.. அவ்வளவுதான்...

சுஜாதா: ஆமாம்.. உன் மாமனார் எதற்காக இப்படி அடிக்கடி பணம் கேட்கிறார்?

நிர்மலா: பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறார். அந்தப் பெண் பாவம், ரொம்பவும் கறுப்பு. கல்யாண மார்க்கெட்டில் எப்படி விலை போக முடியும்? பணத்தைக் கொண்டுதான் சரிக்கட்டியாக வேண்டும் பிள்ளை வீட்டுக்காரர்களை!

சுஜாதா: உன் கணவர்கூடக் கறுப்புத் தானே?

நிர்மலா: ஆண்பிள்ளை எப்படி இருந்தாலும் மதிப்புக் குறையாது.... சுஜாதா...

(இச் சமயம் பஸ் வருகிறது. இருவரும் அதில் ஏறுகிறார்கள்.)

## காட்சி—5

கணேஷ்: என்ன ரகு! அப்பாவுக்கு மறுபடியும் பணம் அனுப்பியாகி விட்டதா?

ரகு: ஓ! எஸ்....

கணேஷ்: தங்கைக்கு எப்போது கல்யாணம்?

ரகு: இருபத்தியேழாம் தேதி!

கணேஷ்: இன்னும் இரண்டு வாரம்தான் இருக்கிறது. பத்திரிகை யெல்லாம் அச்சடித்தாயிற்று? பையன் என்ன படித்திருக்கிறான்? எங்கே வேலை?

ரகு: என் அப்பா அவைகளை யெல்லாம் பற்றி எதுவுமே எழுதவில்லை. இன்னும் இரண்டொரு நாளில் பத்திரிகை அனுப்புவதாக எழுதியிருக்கிறார்.

கணேஷ்: எவ்வளவு நாள் லீவு போடப் போகிறாய்?

ரகு: ஒரு வாரம்.

கணேஷ்: உன் மைத்துனனுக்கு வேலை கிடைத்து விட்டதா?

ரகு: இல்லை.

கணேஷ்: டேய், ரகு; அந்தப் பையனை யாவது இங்கே அழைத்து வைத்துக் கொண்டு ஏதேனும் ஒரு வேலை செய்து வைப்பதுதானே? சுத்த மோசம்டா நீ!

ரகு: போடா, சரிதான்! வேலை கிடைப்பது என்ன அவ்வளவு சுலபமாகவா இருக்கிறது?

கணேஷ்: சுத்த மோசம்டா நீ.

## காட்சி—6

(ரகு நிர்மலா இருவரும் சேர்ந்தாற்போல் வீடு திரும்புகிறார்கள். வழக்கம்போல் தபால்காரர் கதவு இடுக்கின் வழியாக விட்டெறிந்து விட்டுப்போயிருந்த கடிதங்களை ஆளுக்கு ஒன்றாகப் பொறுக்கிக் கொள்கிறார்கள்.

(ரகு தன் கையிலிருந்த கடிதங்களைப் படிக்கிறான்.)

சி. ரகுவுக்கு அநேக ஆசிர்வாதம். இத்துடன் இருபத்தைந்து கல்யாணப் பத்திரிகைகள் அனுப்பி யிருக்கிறேன். உனக்கு வேண்டியவர்களுக்குக் கொடுக்கவும். ஒரு வாரம் முன்பாகவே நீயும் நிர்மலாவும் லீவு எடுத்துக் கொண்டு வந்து விடவும்.

கமலாவுக்குப் பார்த்திருக்கிற பையனைப் பற்றியும் அவனுடைய படிப்பு, வேலையைப் பற்றியும் விவரமாக எழுதியிருக்கிறேன். பையன் பி.ஏ., படித்திருக்கிறான். வேலை யில்லாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்தான். நான்தான் பத்தாயிரம் ரூபாய் செலவு செய்து அவனுக்குச் சொந்தமாக ஒரு கடை வைத்துக் கொடுத்திருக்கிறேன். என்ன செய்வது? கமலாவை வேறு யாரும் மணக்க முன்வரவில்லையே?

ஆசிர்வாதம்
**அப்பா.**

(மனைவியின் பக்கம் திரும்புகிறான் ரகு. அவள் தன் கையில் ஒரு கடிதத்தை வைத்துக் கொண்டு சிலை போல் நின்று கொண்டிருக்கிறாள்.)

ரகு: யார் எழுதியது?

நிர்மலா: என் தம்பி!

ரகு: ப்ஸ...

நிர்மலா: இந்தாருங்கள்... படித்துப் பாருங்கள்...

(அவனிடம் நீட்டுகிறாள் கடிதத்தை.)

ரகு: வேண்டாம். அழுதிருப்பான். வேறு என்ன?

நிர்மலா: இல்லை. அவசியம் நீங்கள் இந்தக் கடிதத்தைப் படிக்க வேண்டும்.

### கோடை ஹாஸ்யம்-5

**கொடைக்கானல் ஏரியில் படகு விடும் தம்பதியர்கள்.**

**மனைவி: ஐயோ படகில் ஓட்டை விழுந்திருக்கே!**

**கணவன்: அதற்கேன் நீ இப்படி அலறுகிறாய், நம்ம படகு மாதிரி! படகோ அவனது! அடைக்கிற செலவும் அவனது! அவன் அடைச்சுக்கிறான்!**




(கடிதத்தை அவன் கையில் வைத்துத் திணிக்கிறாள். ரகு அதைப் படிக்கிறான்.)

அன்புள்ள அக்காவுக்கு, அநேக நமஸ்காரம். எனக்கு வேலை கிடைப்பதாக இல்லை. அதனால் ஒரு வழி செய்தேன். என்ன தெரியுமா? உன் மாமனார் வந்து தம் பெண் கமலாவை மணந்து கொள்ள முடியுமா என்று கேட்டார். 'பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு கடை வைத்துக் கொடுத்து விடுங்கள். வேறு வரதட்சிணை, சீர் வரிசை எதுவும் வேண்டாம்' என்று சொன்னேன். சரி என்று சொல்லி விட்டார். கல்யாணம் நிச்சயமாகி விட்டது. கடைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறேன், தெரியுமா? 'நிர்மலா பேன்ஸி ஸ்டோர்' என்று வைத்திருக்கிறேன். உனக்கு அத்தனை கறுப்பாக ஒரு நாத்தனார் மட்டும் இல்லாமலிருந்தால் எனக்கு இந்த வாய்ப்பும் கிடைக்காதே! உன் மாமனாருக்கு ஒரு மாப்பிள்ளை தேவை. எனக்கோ ஒரு வேலை தேவை. இந்த ஏற்பாட்டினால் இருவருடைய தேவைகளும் பூர்த்தியாகி விட்டன அல்லவா?

நீங்கள் இருவரும் ஒரு வாரம் முன்பாகவே வந்து விடவும். பத்திரிகைகள் இத்துடன் அனுப்பி யிருக்கிறேன். நிற்க.

எனக்கு மருமான் பிறக்கப் போவதாக அம்மா சொன்னாள். ரொம்பச் சந்தோஷம். உனக்குப் பிறக்கப் போகும் கறுப்பு மருமானுக்கு வரன் தேடுகிற வேலை எனக்கு இருக்காது அல்லவா? கறுப்பு வாழ்க!

அன்புடன்
**தம்பி.**

(ரகுவின் கையிலிருந்து கடிதம் நழுவிக் கீழே விழுகிறது.)

# BHEL அறிவிக்கும் ரூ.22-கோடிப் பிழை — சற்றே பெருமைப்படத்தக்க பிழை

**1973-74 ஆண்டு முடிவில் BHEL நிறுவனம் தயாரித்தளித்த பொருட்களின் மொத்த மதிப்பு ரூ. 228 கோடிகள் — அதாவது திட்டமிட்ட தொகையைவிட ரூ. 22 கோடி அதிகம். இதனால் லாபமும், வரிகளைக் கணக்கிடாமல், இரட்டிப்பாகிறது — அதாவது ரூ. 27 கோடி.**

**இது BHELக்கு மிகச் சிறந்த ஆண்டு.**

### 1973-74 ஆண்டின் சிறப்பு — BHEL தயாரிப்பில் 60% வளர்ச்சி:

1973-74 ஆண்டு BHEL-க்கு மிகச் சிறந்த ஆண்டாகும் — தயாரிப்பு மதிப்பும் லாபமும் திட்டமிட்ட தொகையைவிட அதிகம்.

முன் ஆண்டில் தயாரிப்பு மதிப்பு ரூ. 141 கோடிதான். இந்த ஆண்டோ இது ரூ. 228 கோடி — 60% முன்னேற்றம். நடப்பு ஆண்டில் லாபம் ரூ. 27 கோடி. முன் ஆண்டிலோ இது ரூ. 13.2 கோடி.

1973-74 ஆண்டில் மட்டும் 2100 MW அளவு சக்தி உற்பத்தி சாதனம் தயாரானது — கடந்த ஆறு ஆண்டுகளின் தயாரிப்பு மொத்தத்துக்குச் சமம் இது!

### லாபம் ஏறுகிறது — விலையோ போட்டிக்கு ஈடு கொடுக்கிறது

BHEL தனது சக்தி உற்பத்தி சாதனங்களை சர்வதேச விலைக்குத் தருகிறது. மேலும் கூடுதல் நன்மைகளாவன: ஸ்பேர் பகுதிகள், விற்பனைக்குப் பின் பராமரிப்பு வசதி இங்கேயே உண்டு. இவை தவிர, அப்படியே பயன்படத் தயாரான நிலையில் சாதனங்கள் கிடைக்கின்றன. (வெளிநாட்டுச் சாதனமானால் பகுதிபகுதியாக எடுத்துப் பூட்டுவதே ஒரு வேலை.)

சர்வதேச அரங்கிலும் நம் நாட்டிலும் வேறு போட்டியாளர்




BHEL: 15 MKW சக்தியுடன் பணிபுரியக் காத்திருக்கிறது.

BHEL மற்றும் HEIL: நாட்டுக்கு மின் எழுச்சி தந்த திருமணம்

இருக்க, ஸ்விட்ச்கீர், டிரான்ஸ்பார்மர், பாயிலர் போன்ற சாதனங்கள் BHEL சகாயவிலை காரணமாக அதிகம் விற்பனையாகின்றன.

அரசுத்துறை நிறுவனங்களில் 10% அதிகமாக விலையில் அமைத்துக் கொள்ளலாம் என்ற சலுகையை BHEL பயன்படுத்திக்கொள்ளவில்லை. இருந்தும் லாபம் அதிகரித்துள்ளது.

விலை மட்டுமா? தரமும் போட்டிக்கு ஈடு கொடுக்கிறது. ஆகவேதான் மலேசியா, சிங்கப்பூர், கானா, ஈரான், மாலவி, கம்போடியா, ஸ்ரீலங்கா, கென்யா, ஐக்கிய அரபு நாடுகள், பிரிட்டன் போன்ற நாடுகளுக்கு மின்சார சாதனங்களை ஏற்றுமதி செய்கிறது. BHEL தனது தொழில்நுட்ப ஆலோசனை நிபுணர்களையும் வெளிநாடுகளுக்கு அனுப்புகிறது.

**1973 — BHEL 'முதன்மை' பல கண்ட ஆண்டு.**

1973-74 ஆண்டில் முதல் 100 MW ஜெனரேட்டரும் டர்பைனும் தயாரிக்கப்பட்டன. முதல் 100 MW நிலையமும் முதல் 120 MW நிலையமும் தொடங்கப்பட்டதும் இந்த ஆண்டிலேதான்.

மிகவும் உயர்ந்த தரமுள்ள தொழில்நுட்பத் திறனைத் தேடிப் பெறுவதே BHEL கொள்கை. இதனால் அமெரிக்கா, ஸ்வீடன், மேற்கு ஜெர்மனி நாடுகளிலுள்ள தலைசிறந்த நிறுவனங்களுடன் கூட்டு ஒப்பந்தங்கள் நேர்ந்துள்ளன — ஏர் ப்ரீ-ஹீட்டர், எலெக்ட்ரோஸ்டாடிக் பிரிசிபிடேடர் மற்றும் ஆக்ஸியல், ரேடியல் ஃபேன் தயாரிப்புகளுக்கான கூட்டு முயற்சி ஒப்பந்தங்கள்.

தெரிகிறதல்லவா, BHELக்கு இது நல்ல ஆண்டு மட்டுமல்ல; மிகச் சிறந்த ஆண்டு.




**மக்களுக்கு சக்தி**

பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்
18-20 கஸ்தூர்பா காந்தி மார்க்
புது டில்லி 110 001



BHEL — பொருளாதார விடுதலைக்காக வீரவாள் வீசுகிறது, ஜான்ஸியில்



BHEL: இந்தியாவை சக்தி-அணியில் உயர்த்திய சாதனம்

SAA/BHEL/1359

# 'மினிக்' கதைகள் மூன்று

அலாவுதீன் தனது மந்திர விளக்கை மாடத்திலிருந்து எடுத்தான். ஊதி ஊதி அதன் மேல் படிந்திருந்த தூசியைப் போக்கினான்.

ஒவ்வொரு மாதமும் பத்தாம் தேதி வீட்டுக்குத் தேவையான பொருள்கள் தீர்ந்துவிடும். அப்படிக் தீர்ந்ததும் இப்படித்தான் அலாவுதீன் மாடத்திலிருந்து விளக்கை எடுத்துக் தூசியைப் போக்குவான். தூசி போனதும் அலாவுதீன் விளக்கைப் பூமியில் தேய்ப்பான். இரண்டு நிமிஷங்களில் கனத்த குரல் கொடுத்தவாறு ராக்ஷசன் தோன்றுவான். அலாவுதீனுக்கு எதிரே கைகட்டி வாய் புதைத்து, ''என்ன உத்தரவு எசமான்!'' என்று கேட்பான்.

அன்றும் அப்படித்தான். ராக்ஷஸன் தோன்றியதும் அலாவுதீன் பெரிய லிஸ்டாக அவன் கையில் கொடுத்து ''இந்தப் பொருள்களையெல்லாம் விரைவில் எனக்குக் கொண்டு வந்து தா!'' என்று உத்தரவிட்டான்.

''உத்தரவு எசமான்!'' என்று கூறி ராக்ஷசன் மறைந்து விட்டான்.

இரண்டு நாட்கள் ஓடிவிட்டன. ஆயினும் அலாவுதீன் கேட்ட பொருள்கள் வரவில்லை. கோபத்தோடு மறுபடியும் விளக்கை எடுத்துப் பூமியில் போட்டு ஆக்கிரம் தீரத் தேய்த்தான். பதினைந்து நிமிஷங்கள் தேய்த்த பின்தான் ராக்ஷஸன் தோன்றினான்.

''உத்தரவு தாருங்கள், எசமான்!'' என்று இரண்டு கைகளையும் கட்டிக் கொண்டு வெகு வினயமாக வேண்டினான் அரக்கன்.

''இரண்டு நாட்களுக்கு முன் நான் சில பொருள்கள் வேண்டி உன்னிடம் ஒரு லிஸ்ட் கொடுத்தேனே, அவற்றை உடனே கொண்டு வா!'' அலாவுதீன் கோப வெறியில் கத்தினான்.

''இதோ நொடியில் வந்துவிடும் எசமான்!'' என்று விரலை ஒரு சொடுக்குச் சொடுக்கிக் கொண்டு வெளியேறினான் ராக்ஷசன்.

நான்கைந்து நாட்கள் ஓடிவிட்டன. அப்படியும் பொருள்கள் வந்து சேர்ந்தபாடில்லை. அலாவுதீனுக்கு வானளாவக் கோபம் வந்தது. அரை மணி நேரம் விளக்கைப் போட்டுத் தேய்த்துக் கை வலி கண்டதுதான் மிச்சம். அரக்கன் வரவில்லை. ஆயினும் காரியம் ஆகவேண்டுமே? அதனால் நாற்பது நிமிஷங்கள் பொறுமையைக் கைவிடாமல் தேய்த்தான். தப்ப முடியாது என்று தீர்மானித்தோ என்னவோ ராக்ஷசன் அவன் முன்னால் தோன்றிக் கைகட்டி நின்றான். ''உத்தர விடுங்கள், எசமான்!'' என்று பணிவாக வேண்டினான்.

அலாவுதீன் பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டு ராக்ஷசனை நோக்கி ''நான் கேட்ட பொருள்கள் என்ன ஆயின?'' என்று கேட்டான்.

''இதோ வந்துவிடும், எசமான்!''

''பேசாதே, போக்கிரிப் பயலே!'' அலாவுதீன் கண்களை உருட்டி ராட்சதனைக் கடிந்து கொண்டான். ''நான் கேட்ட பொருள்கள் வரவில்லை என்பது ஒருபுறம் இருக்கட்டும். முக்கால் மணி — ஒரு மணி நேரம் நான் விடாமல் விளக்கைத் தேய்த்தாலும் கூட நீ வரும் வழியைக் காணோமே! என்ன காரணம்?''

பதில் அளிப்பதற்குப் பதிலாக அரக்கன் இரு கைகளையும் பவ்யமாகக் கட்டிக் கொண்டு இரந்து நிற்கும் பாவனையில் வாய் திறவாது அமைதியாக நின்றான்.

அலாவுதீன் கோபம் தணிந்த பின் ராக்ஷசனை அநுதாபத்தோடு கேட்டான்: ''ஆமாம், உன்னிடம் இந்தத் திடீர் மாற்றம் எப்படி வந்தது?''

''எசமான்...'' தயங்கித் தயங்கிக் கூறினான் ராட்சதன்: ''நான் அரசாங்கத்தில் வேலை செய்யத் தொடங்கி விட்டேன்...!''

''அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''நன்றாகக் கேட்டீர்களே? அரசாங்கத்தில் உத்தியோகம் என்றால் யாராவது வேலை செய்வார்களா?'' சிறிது நிறுத்திய ராக்ஷஸன் ''அப்படியே செய்தாலும் உங்கள் வேலைக்கு 'ஓவர்டைம்' கொடுப்பது யார்? — பற்றாக்குறைக்கு என் குடும்பத்துக்குச் சாமான்கள் வாங்கிப் போடவே எனக்குப் பொழுது பற்றவில்லை!'' என்று முடித்தான்.

*   *   *

முருக்க மரம் ஏறியிருந்த வேதாளத்தை இறக்கித் தோளில் போட்டுக் கொண்டு விக்





கிரமாதித்திய மன்னர் அரண்மனைக்குத் திரும்பினர். வழியிலேயே வேதாளம் ஒரு கதையைத் தொடங்கியது:

''ஒரே ஒரு பட்டினம். அந்தப் பட்டினத்துப் பெண்டிர்கள் தங்கள் கணவன்மார்களைக் கண்ணில் விரலை விட்டு ஆட்டிக் கஷ்டம் தர வேண்டும் என்ற எழுதாக் கொள்கை ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு அதற்கேற்ப இயங்கி வந்தனர். அந்தக் கொள்கை வெற்றி பெற வேண்டும் என்பதற்காகப் பெருத்த அளவில் அங்கத்தினர்கள் கூட்டி 'க. க. க.' என்ற ஓர் அமைப்பை உருவாக்கினர். க. க. க. என்பது 'கணவன்மார்களைக் கஷ்டப்படுத்தும் கழகம்' என்று பெருகி விரியும். அதன் கிளை கிளை நகரத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் வளர்த்தனர். தபால் இலாகா ஜோன் நெம்பர்களைப் பெருக்குவது போல் என்று சொன்னாலும் சரி, அல்லது நகராண்மைக் கழகம் வட்டங்களை வளர்ப்பது போல் என்று சொன்னாலும் சரி. இந்தக் கழகத்தின் பெண் உறுப்பினர்கள் ஓர் உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டும். ''என்னால் இயன்றவரை என் கணவரைத் துன்புறுத்தப் புதுப் புது வழி வகைகளைக் கண்டுபிடிப்பேன். அவற்றைக் கணவனிடம் பிரயோகித்துப் பார்ப்பேன். வெற்றிகரமாகப் படும் வழிகளை மற்றப் பெண் அங்கத்தினர்களுக்கும் சொல்லித் தருவேன்.'' இதுவே அந்த உறுதிமொழியாகும்.

கணவனுக்குச் சர்க்கரையை அள்ளிக் கொட்டிக் காலைக் காப்பியின் ருசியைக் கெடுப்பதில் தொடங்கி, அவன் ஆபீஸ் புறப்படும் நேரம் பார்த்து மோட்டார் சாவியையோ சைக்கிள் சாவியையோ காணாமற் போக்கித் தொல்லை தருகிற என்ற சாதாரணச் சோதனைகளை இடைச் செருகி, கோடீசுவரன்—லட்சாதிபதி என்றிருந்தால் அவர்களை மோட்டார்களில் செல்ல விடாமல் நடந்தே போக வைக்கிறதென்ற அசாதாரணச் சோதனைகள் வரை செய்து பார்ப்பதில் இப்பெண்கள் தங்கள் கைவரிசைகளைக் காட்டினர். நகரக் கழகங்கள் நல்லபடியாகச் செயல்பட வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் இந்தப் பெண்மணிகள் ஒரு பெண்மணியைத் தங்கள் தலைவியாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தனர்.

'ஹஸ்பெண்ட் ஹாரஸ் கிளப்' என்று ஆங்கில நாமம் பூண்ட இந்தக் கழகத்தின் வடக்கு வட்டக் கிளைக்கு ஒரு பெண்மணி தலைவியாக இருந்தாள். மற்றப் பெண்களைக் காட்டிலும் தன் கணவனை ஆட்டிப் படைப்பதில் அவள் அதி வல்லுநள். ஆனால் அவள் கணவனோ மிக மிகப் பொறுமைசாலி. அவள் என்னதான் துன்புறுத்தினாலும் சிரித்த முகத்துடன் சகித்துக் கொண்டு விடுவான். கணவனைக் கஷ்டப்படுத்துவதற்கு அவளாகக் கண்டுபிடித்த முறைகள், அவளது கழக அங்கத்தினர்கள் கற்றுக் கொடுத்த மற்ற முறைகள் எல்லாவற்றையும் அவள் தன் கணவன் விஷயத்தில் பயன்படுத்திப் பார்த்து விட்டாள். அத்தனையையும் அவள் கணவன் பொறுத்துக் கொண்டு விட்டான்! 'பொறுமையின் பூஷணம்' என்ற பட்டமும் அவன் வாங்கி விட்டான்.

அதனால் அவளது தன்மான உணர்ச்சி தாக்குண்டது. கடைசி உபாயமாகத் தன் கணவனைத் துன்புறுத்த வேண்டி, அவன் உணர்ச்சிகளைக் கிளறிப் பார்க்க வேண்டி, வேறு ஒருவனைக் காதலிக்கத் தொடங்கினாள். அதாவது அப்படி ஓர் ஆட்டம் போட்டாள். நாடகம் நடத்தினாள். அவளது அந்தக்





## அடக்கத்துக்கு அறுபது ஆண்டு

அடக்கம் அமரருள் உய்க்கும்.

இம் மூதுரைக்கு இலக்கணமாகத் திகழ்பவர் பிரம்மஸ்ரீ பழனூர் நா. நாராயண சாஸ்திரிகள். எளிய வாழ்வும் சீரிய நோக்கும் கொண்டு வேதம் தழைக்க வேத நெறி வழுவாது வாழும் ஸ்ரீ சாஸ்திரிகள் கருணானந்த மண்டலியின் ஸ்தாபகர். இதன் மூலம் இன்றைய இளம் சமுதாயத்தினருக்கு வேத அறிவு புகட்டி வருகிறார். அதேநேரத்தில் சொல்லும் செயலும் இணைந்து வாழ்ந்தால் எத்தகைய நிம்மதியும் இன்பமும் பெறலாம் என்பதை வாழ்ந்தே காட்டி வருகிறார். 'பற்றற்றான் பற்றினைப் பற்றுக — பற்றுக அப் பற்று விடற்கு' என்னும் குறளைக் கடைப் பிடித்து ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி முனிவரிடம் பற்று மிகக் கொண்டவர். பெரியவர்களின் பெருங் கருணைக்குப் பாத்திரமான ஸ்ரீ சாஸ்திரிகள் ஆகம—நியமங்களை நன்கு உணர்ந்தவர். எனவே பல பெருங் கோயில்களுக்குக் கும்பாபிஷேகம் நடத்தி வைக்க ஸ்ரீ பெரியவர்களாலேயே அனுப்பி வைக்கப்படும் பாக்கியம் பெற்றவர். சிறந்த ஸ்ரீ வித்யா உபாசகர்.

அடக்கம் காரணமாகக் குடத்தினுள் குத்து விளக்காகத் திகழ்ந்த ஸ்ரீ சாஸ்திரிகளை அவரது சிஷ்ய கோடிகள் குன்றின் மேலிட்ட குத்து விளக்காக்கி விட்டனர். ஆம், அவரது அறுபதாவது ஆண்டுவிழா அத்தனை சிறப்பாக நடந்தது. ஸ்ரீ டி. எம். பி. மகாதேவன் தலைமையில் நடைபெற்ற பாராட்டு விழாவில் உயர்நீதிமன்ற நீதிபதிகள் ஸ்ரீ கே. எஸ். வெங்கடராமன், ஸ்ரீ சேதுராமன், அண்ணா ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் ஆகியவர்கள் பங்கெடுத்துக் கொண்டு பாராட்டினார்கள். அவ்வமயம் விழா மலர், மகா திரிபுர சுந்தரீபூஜா கல்பம் என்னும் நூல் ஆகியவை வெளியிடப் பெற்றன.

தமக்குக் கிடைத்த அத்தனை பெருமையும் ஸ்ரீ வேத மாதாவையும் ஜகத்குருவையுமே சாரும் என்று ஸ்ரீ சாஸ்திரிகள் அடக்கத்தின் உறைவிடமாக மறுமொழி அளித்தாலும், அவரது அடக்கப் பணி நீண்டு நடைபெற அவருக்கு நிறை வாழ்வு நல்குமாறு இறையருளை வேண்டுவோம்.

---



செல்வி பூங்கோதை எழுதிய 'வேணிபுரத்து வெள்ளம்' சிறுகதைத் தொகுதி நூலின் வெளியீட்டு விழா அண்மையில் கல்வி அமைச்சின் வித்யாதிபதி திரு கி. லக்ஷ்மண ஐயர் தலைமையில் கொழும்பில் நடைபெற்றது.

படத்தில் டாக்டர் இந்திரா ஸ்ரீஸ்கந்தராஜா சிவயோகம் வெளியீட்டுரை நிகழ்த்துவதையும், தலைவர் கி. லக்ஷ்மண ஐயர், டி.டி. நாணயக்காரா, கலாநிதி கோபால பிள்ளை மகாதேவா, நூல் ஆசிரியை 'பூங்கோதை' ஆகியோரையும் காணலாம்.

---

காதல் விஷயம் தெரிந்ததும் கணவனுக்கு இரத்தம் கொதிக்கவில்லை. மாறாக மனம் மகிழ்ந்தது. கண்டு கொள்ளாதவன் போலவே அவன் பேசாமல் இருந்து விட்டான்.

ஆத்திரம் அத்துமீறவே, கடைசியில் ஒரு நாள் அவள் தனது அந்தக் காதலனையே கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகக் கணவனிடமே நேருக்கு நேர் சொன்னாள். ஆனால் அதற்கு நேர்மாறாக அவளது கணவன் அதையே எதிர்பார்த்திருந்தாற் போல், தானே முன்வந்து முகத்தில் முறுவல் தவழ மகிழ்ச்சியுடன் அவளை அவளது காதலனின் கரம் பற்ற வைத்து விட்டான்.

கதையை இங்கு நிறுத்தி வேதாளம் விக்கிரமாதித்த மன்னரை வினவியது: ''ஓய், விக்கிரமாதித்த மன்னரே! அந்த மனிதன் தன் ஆண்மைக்கு இழுக்கு என்று மனம் நோகாமல், தனது மனைவியை வேறு ஓர் ஆடவனிடம் ஒப்படைக்க எப்படித் துணிந்தான்? அதுவும் சிரித்துக் கொண்டே?''

''மனைவியின் தொல்லைகளிலிருந்து தப்ப வழி கிடைத்ததே என்ற மகிழ்ச்சியில் சிரித்திருக்கலாம். இது இயல்பு. ஆனால் அந்த ஆடவனிடத்தில் எத்தனை நாட்கள் பழைய பகைமையோ? பழி வாங்க வாய்ப்புக் கிட்டியதே என்ற களிப்பில் சிரித்திருப்பான் என்றுதான் எனக்குப் படுகிறது. ஏனெனில் ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கும் பயன் கிட்டிவிட்டதல்லவா?'' என்ற விக்கிரமாதித்தன், ''இப்படியெல்லாம் நம் பாரத நாட்டில் நடக்க நியாயம் இல்லை'' என்று ஓர் ஐயத்தை எழுப்பவே, வேதாளம் மீண்டும் முருக்க மரம் ஏறிக் கொண்டது.

விக்கிரமாதித்தன் சளைக்கவில்லை. மீண்டும் வேதாளத்தை மரத்திலிருந்து இறக்கித்

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...




*...NATURALLY!*

**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**




**The Illustrated Weekly of India**

தோளில் தூக்கிக் கொண்டு நடந்தான். அது அப்பொழுது வேறு ஒரு கதை கூறத் தொடங்கியது.

''ஒரு சமயம் பெரிய வியாபாரி ஒருவர் அமைச்சருக்குப் பெருந் தொகையை லஞ்சமாகக் கொடுக்க முயன்றார், பணம் பத்தும் செய்யும் என்ற நம்பிக்கையில். ஆனால் அதைக் கண்ட அமைச்சர் மனம் குமைந்து, ''என்னை என்ன அல்க்காப் பேர்வழியாக எண்ணி விட்டீர்களா?'' என்று கடிந்து கொண்டு விட்டார்.

வியாபாரிக்கு வியர்த்து விறுவிறுத்துப் போய்விட்டது. அவர் அமைச்சரிடம் மன்னிப்புக் கோரியவாறே எடுத்த பணத்தை மீண்டும் தம் பைக்குள்ளேயே போட்டுக் கொள்ளப் போனார். அப்பொழுது அமைச்சர் அவர் கையைப் பற்றி, ''இந்த ரூபாயை உங்கள் பையில் ஏன் திரும்பப் போட்டுக் கொள்கிறீர்கள்? ஏதாவது ஒரு நல்ல காரியத்துக்கு—அறப் பணி நிறுவனத்துக்குச் செலவழித்து விடுங்கள். எனக்குத் தெரிந்து ஒரு கழகம் நன்றாக இயங்கி வருகிறது. அதற்கே கூட நீங்கள் இந்தத் தொகையை நன்கொடையாக அளிக்கலாம். ஆனால் ஒன்று, நீங்கள் கொடுத்த பணத்துக்கு ரசீது வாங்கத் தவறாதீர்கள். அதை என்னிடம் காட்டவும் மறக்காதீர்கள்!'' என்றார்.

அந்த வியாபாரி அமைச்சரின் கூற்றை அப்படியே நிறைவேற்றினார். அவர் காரியம் நடந்து விட்டது. கடைசியில் அது முறைப் பழக்கமாகவே கூடப் பரிணமித்தது. தமது பொருள்களை விற்கப் போகும் எந்த வியாபாரியுமே தமது லாபத்தில் பத்து சதவிகிதத் தொகையை அமைச்சர் கூறிய அற நிறுவனத்துக்கு நன்கொடையாக வழங்கும் வழக்கத்தை மேற்கொண்டனர். அமைச்சருக்கு ரசீதைக் காட்டவும் தவறுவதில்லை. ரசீதைப் பார்த்த பின் அமைச்சர் பொருளின் தரத்தைப் பார்த்து 'நொட்டு நொகக்கு'ச் சொல்வதில்லை. இப்படியாக வியாபாரிகளின் காரியம் 'நர்விசாக' நிறைவேறி வந்தது.

ஒரே ஒரு வியாபாரி மட்டும் இந்த அற நிறுவனத்தைப் பற்றித் துருவித் துழாவிப் பார்த்தார். அந்த நிறுவனம் அமைச்சரின் தம்பியின் பெயரால் இயங்கி வந்தது.''

கதையை இப்படியே நிறுத்திவிட்டு வேதாளம் விக்கிரமாதித்த மன்னரைப் பார்த்து, ''ஓய் விக்கிரமாதித்த மன்னரே! வியாபாரிகள் இந்த நிறுவனத்துக்கு அளித்த தொகையை நன்கொடை என்பதா? லஞ்சம் என்பதா?'' என்று கேட்டது.

''கட்டாயம் அது நன்கொடைதான்!'' விக்கிரமாதித்த மன்னர் அடித்துச் சொன்னார்: ''ஏனெனில் கொடுத்த தொகைக்கு ரசீது கொடுத்து விட்டால் அதை லஞ்சம் என்று கூற முடியாது!'

''பேஷ் விக்கிரமாதித்தரே! நீர் பலே கெட்டிக்காரர்தான்!'' என்று கூறிய வேதாளம் மீண்டும் ஒருமுறை அவரை அசடாக்கிவிட்டுத் தன்னை விடுவித்துக் கொண்டு மரத்தின் மேல் ஏறித் தொத்திக் கொண்டது, வௌவாலாக.

— 'விரோத் பட்ட'

தமிழாக்கம்: அக்ஷயம்

# சட்டைக்காரி

''கதையில் என்ன இருக்கிறது?''

''கதையில் என்ன இருக்கிறதா? ஒரு கதைக்கு என்ன வேண்டும்?''

''காதல்!''

''அந்தக் காதல் பம்மனின் மலையாள நாவலில் எப்படி வர்ணிக்கப் பட்டிருக்கிறதோ, தெரியாது! திரைப்படத்தில் அது விரவிப் படர்ந்து, கெட்டிக் காதலாகி, கட்டிக் காதலாகிச் சக்கைப் போடு போடுகிறது. ஹிந்திப் படம் 'பாபி'யில் பயமறியாத இளங் கன்றுகள் என்றால் சட்டைக்காரியில் அநுபவம் வெளுத்து வாங்குகிறது.

''சொல்லப் போனால் இது ஒரு காந்தர்வக் கதை. ஆமாம், ஜூலியும், சசியும் கண்டதும் காதல் கொள்ளுகின்றனர். சகுந்தலை—துஷ்யந்தனைப் போல. பாரதன் ஒருவன் பிறக்கிறான் பரதனைப் போல. குலம்—கோத்திரம் பாராது கிறிஸ்துவ—ஹிந்துக் குடும்பங்களைச் சரியாகச் சிக்க வைத்து, சுலபமாகச் சிக்கெடுத்து ஓர் இந்தியனைப் பெற்றுத் தந்து சுபமாக முடிகிறது.''

சிக்கலான கதை சிக்கலில்லாது முடியத் தோப்பில் பாஸியின் வசனங்கள் கைகொடுக்கின்றன ஒருபுறம். இன்னொரு புறம் சேது மாதவனின் தெளிவான டைரக்ஷன் சட்டைக்காரியின் சிறப்புக்குக் கட்டியம் கூறுகிறது. மலையாள மண்ணின் இயற்கைச் சூழல், பானு மஹேந்திராவின் புகைப்படக் கலைத் திறனை நன்கு பயன்படுத்திக்கொண்டிருக்கிறது. பலன், இப்படத்தின் 'டைட்டில்' தொடக்கமே பிரமாதமாகக் களை கட்டிவிடுகிறது. குறை நிறைகளைக் களையெடுக்கவே முடியாது என்ற அளவுக்குப் படப்பிடிப்பு — 'புரொடக்ஷன் வால்யூ' பெற்றுள்ளது.

நடிகர்கள் அனைவருமே பாத்திரத்தின் தன்மை அறிந்து சிறப்பாக நடித்திருக்கின்றனர். ஜூலியாக வரும் லக்ஷ்மியின் நடிப்பில்தான் என்ன அநாயாசம்! ரசிகர்களை மெய் கிறங்கவே வைத்து விடுகிறார். மோரிஸாக வரும் ஆடூர் பாஸி, மார்க்கரெட்டாக வரும் சுகுமாரி, வாரியாராக வரும் சங்கரடி, அவர் மனைவியாக வரும் மீனா, உஷாவாக வரும் சுஜாதா, சசியாக வரும் மோகன் ஆகியவர்களது நடிப்பில் நிறைவைக் காண முடிகிறது.

தொடக்கத்தில் களை கட்டி மனத்தை நிறைக்கும் படம் கடைசியில் நாடகப் பாங்கு மிகுதியினால் சில இடங்களில் 'சப்பு'க்கொட்ட வைக்கிறது.

— ரச. வீ.





தண்டனைக் காலம் முடிந்து அவன் வெளியேறும்போது, சிறைச்சாலையின் அதிகாரி, அன்பும் பரிவும் நிறைய, ''என்ன பயில்வான்! அடுத்த 'விசிட்' எப்போது?'' என்று முறுவலோடு கேட்டார்.

பயில்வான் பதிலுக்கு முறுவலித்தான்.

''வெளிக் காற்று உடம்புக்குப் பொருந்தாதுங்க! ஜல்தி வந்துடமாட்டேனுங்களா ?''

'' அதுவும் சரிதான். உன்னைக் கட்டாயம் நம்பலாம். ஜெயில் உன் தாய் வீடு மாதிரி'' அவர் சிரித்தவாறே அவனுக்கு விடையளித்தார். அவனும் அவருக்கு வணக்கம் தெரிவித்து விட்டு ராஜ நடை நடந்து கொண்டே சிறைச்சாலையைவிட்டு வெளியே வந்தான்.

அப்படி வந்தவன் ஒரு கணம் நின்று வெளியுலகைப் பார்த்தான். பார்வையில் ஓர் அலட்சியம், ''என்ன இருக்கிறது, உன்னிடம், எனக்குக் கொடுக்க?'' என்பது போல். சிறைச்சாலைக்கு வெளியே வரும் போதெல்லாம் அவனை ஆட்கொள்ளும் தனிமை உணர்ச்சி இப்போதும் அவனை ஆட்கொண்டது. ''சீ ! இங்கே இருப்பது பசி, பசி, பசிதான் !'' என்று அலுத்துக் கொண்டான். வேளைக்குச் சரியாகத் தட்டில் தானே விழும் உணவு இங்கு கிடைக்குமா ? ஜெயிலில் — தாய் வீட்டில்தான்—கிடைக்கும் !

பயில்வானுடைய இயற்பெயர் என்ன என்பது அவனுக்கே தெரியாது. மனித உருவை ஊனாலும் உதிரத்தாலும் செய்யாமல் கருங்கல்லினால் செய்தது போன்ற அவன் தோற்றமே அந்தப் பெயருக்குக் காரணம். பதினைந்து வயதில் பூரணமாக வளர்ந்த உடம்பு இதோ முப்பது வயதிலும் அப்படியேதான் இருக்கிறது!

அவனுக்குத் தாய் தகப்பனின் முகம் தெரியாது. ஒட்டி உலர்ந்த ஒரு கிழவிதான் அவனை வளர்த்து வந்தாள். நினைவு தெரிந்த நாள் முதல் அவனுக்குப் பரிச்சயமான முகம் அவள் முகம் மட்டும்தான். ஒரு குடிசையில் வாழும். அவள் சூரியோதயம் ஆகுமுன் கறிகாய்க் கூடையோடு சென்றால், பன்னிரண்டு மணிக்கு மேல்தான் திரும்புவாள். அவள் படைக்கும் சோறு அமுதமாகப் பசித்த வயிற்றை நிறைக்கும். பின், மறுபடியும், சென்று விடுவாள், பூ வியாபாரத்துக்கு.

அவளை அவன், ''பாட்டியம்மா !'' என்று அழைத்து வந்தான். அவள் இட்ட இரண்டு வேளைச் சோறு அவன் உடம்பில் எத்தகைய பலத்தை வளர்த்தது! வயதுக்கு மீறிய வளர்ச்சியும், குழந்தை மனமுமாய், அவன் கவலையில்லாமல் இருந்தான்.

ஒரு நாள் கூடையோடு சென்றவள் திரும்பி வரவில்லை. மாலையில் யார் யாரோ வந்து ஒப்பாரி வைத்தார்கள். யார் யாரோ வந்து குடிசையிலிருந்த அழுத்தமான ஓரிரு சாமான்களைத் தூக்கிச் சென்றார்கள். அவனை அங்கிருந்து துரத்தினார்கள்.

அப்போது அவனுக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். முகத்தில் இன்னும் குழந்தைத் தன்மை மாறவில்லை. உலகத்தை விரும்பவோ வெறுக்கவோ அவன் கற்றதில்லை. உலகத்தின் அழுக்குக் கரம் தீண்டாத தூயவனாக இருந்தவனைச் சமூகம் சுயநலப் பார்வையோடு பார்த்தது.

பசி என்றால் என்ன என்று இத்தனை நாட்களும் அறியாதவனின் பசியையே கருவியாக்கிக் கொண்டான், அங்குள்ள கடைக்காரன் ஒருவன்.

கடையில் வேலைக்காரனாகச் சேர்ந்தான் பையன். சம்பளமாவது! பசித்த வயிற்றுக்கு இரண்டு வேளைச் சோறு! ஆனால் வயிறு நிறைந்தால்தானே? கால் வயிற்றுச் சோறு அவன் மனத்தில் மெள்ள மெள்ளக் கள்ளத்தைப் புகுத்திற்று. கடையில் அவன் கண்கூடாகக் கண்டதோ, ஒவ்வொரு பொருளையும் காசாக்கும் வித்தை. கற்க எத்தனை நாட்களாகும்?

முதல் திருட்டை அவன் செய்தபோது அவனுக்குப் பதினைந்து வயது நிறையவில்லை. ஆனால் பார்க்கப் பதினெட்டு வயது இளைஞனின் வளர்ச்சி. ஜெயில் வாசம் தண்டனையாகக் கிடைத்தது.

அதன் ருசி அவனைக் கவர்ந்தது.

ஜெயிலில் தனக்கிடப்பட்ட வேலையை அவன் அப்பழுக்கில்லாமல் செய்தான். தோட்ட வேலையா? அறையைச் சுத்தம் செய்ய வேண்டுமா? தச்சு வேலையா? தண்ணீர் இறைக்க வேண்டுமா? அவனுடைய இரும்புத் தேகத்துக்கு எல்லாமே விளையாட்டாகத்தான் இருந்தது. ஆனால் இங்கே வஞ்சனையில்லாமல் உணவளித்தார்கள். ''பயில்வான்'' என்று செல்லப் பெயரிட்டு அழைத்தார்கள்.

கிழவியிடம் தனக்கிருந்த பாசத்தை அவன் ஜெயில் வாசத்தின் மீது திசை திருப்பினான்.

வெளியே இருக்கும் நாட்களில் சிறு சிறு திருட்டுக்கள். ஹோட்டலில் புகுந்து வயிறார உண்டுவிட்டுப் பணம் கொடுக்காமல் கையை விரிப்பது. பட்டப் பகலில் பெரிய கடைக்குள் புகுந்து ரெடிமேட் ஷர்ட்டை எடுத்துக் கொண்டு நடையைக் கட்டுவது. இப்படியாக, தன் மனம் கவர்ந்த சிறைச்சாலை வாசத்துக்கு வழிவகுத்துத் தரும் வகைகளை அவன் நாளடைவில் கற்றுக் கொண்டான்.

ஆனால் ஜெயில் வாசமும் காலத்தின் கரமும் கூடத் தீண்ட முடியாத ஒருவித



# தாய் வீடு!

## ருக்மிணி பார்த்தசாரதி

தாய்மை அவனிடம் தெய்வத்தின் வரப் பிரசாதமாக இருந்து வந்தது. அப்ஸரஸ்களாலும் அசைக்க முடியாத நேர் பார்வை. சலனத்தை வென்ற துறவியின் இதயம். துயரத்தைக் கண்டு கனிந்துருகும் நெஞ்சம். எத்தனையோ முறைகள் ஜெயிலிலிருந்து விடுதலையடைந்து மறுபடியும் ஜெயிலுக்குள் பிரவேசிக்கும் வழியை அவன் ஆராய்ந்து கொண்டிருக்கும்போது இதயத்தைத் தொடும் காட்சியைக் காண்பான். கழுத்து துவளத் துவளச் சுமைக் கூடையோடு தள்ளாடும் பெண்ணின் கூடையைச் சற்றுத் தூரம் தான் சுமப்பான். குருட்டுப் பிச்சைக்காரனின் விரலைப் பிடித்து மெயின் ரோட்டைத் தாண்டும்வரை அழைத்துச் செல்வான். சிறுவனொருவனைக் காரணமின்றி அடித்துக் கொண்டிருக்கும் முரடனின் முகத்தில் தன் இரும்புக் கரத்தால் நான்கு குத்துக்கள் வழங்குவான். அநாதைப் பிணத்தைச் சுமக்க வேண்டுமா? அதற்கும் தயார்.

இப்படியே வருடங்கள் நழுவி விட்டன. சிறைச்சாலை அவன் தாயகம். வெளி உலகத்தில் அவனுக்கு எந்த விதமான பந்தமோ, மோகமோ கிடையாது. ஒவ்வொரு முறை அவன் விடுதலையாகும்போதும், அங்குள்ளவர்கள், ''எப்போது திரும்பி வருவாய்?'' என்று அன்போடு கேட்பார்கள். ''சீக்கிரமே!'' என்று கூறிவிட்டு அவன் விரைவில் திரும்பி விடுவான்.

இப்போதும், முப்பது வயது நிறைந்து விட்ட இப்போதும், 'சீக்கிரமே திரும்பி விடவேண்டும்!' என்றுதான் அவன் தீர்மானித்தான்.

ஆனால் விதி அவனுக்காக வேறொரு திட்டம் தீட்டி வைத்திருந்தது.

பார்வையில் அலட்சியத்தோடு நடந்தான் பயில்வான். ஜேபியில் கொஞ்சம் பணம் இருந்தது. சிறைச்சாலையில் கொடுத்ததுதான். அது இருக்கும்வரை காக கொடுத்துச் சாப்பிடலாம்.... மரத்து நிழலில் படுத்துத் தூங்கலாம்... அலுக்காமல் சுழலும் சமூகத்தைக் கண்டு மனத்துக்குள் சிரித்துக் கொள்ளலாம். பிறகு ஏதாவதொரு துணிச்சலான திருட்டு. இல்லாவிட்டால் போலீஸ்காரரை வம்புக்கிழுத்தல். அப்புறம் கேட்பானேன்? மறுபடியும் தாய் வீட்டு விஜயம்தான்!

மலர்ந்த முகத்தோடு ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். ஸ்வீட், காரம் என்று சாப்பிட்டான். அலட்சியமாகக் காசை வீசி விட்டு மேலே நடந்தான்.

பட்டப் பகலில் மின் விளக்குகள் எரியும் கடைகள்... இரண்டு தெருக்களுக்கு அப்பாலே பிச்சைக்காரர் குடும்பங்கள். பெரிய பெரிய சினிமாக் கொட்டகைகளின் போஸ்டர்களில் ''துணி எதற்கு?'' என்று கேட்பவர்களைப் போலக் காட்சி தரும் பெண்மணி

**கோடை ஹாஸ்யம்-6**

"இந்த வெய்யிலில் துரைசாமி குடையுமில்லாமல் காலில் செருப்பும் இல்லாமல் நிம்மதியாய்ப் போருனே!"

"அவன் கொடுத்து வைச்சவன். அவனுக்கு இருக்கிற கவலையிலே வெய்யிலே தெரியாமல் நடக்க முடிகிறது!"



களின் கவர்ச்சிமிகு தோற்றங்கள்... கொட்டகை வாசலிலோ கந்தலை உடுத்திக்கொண்டு பசியால் வாடிய முகத்தோடு நிற்கும் ஒரு கிழவன். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு, அதனால் சலிப்போ, மன விகாரமோ கொள்ளாமல் துறவி போல் நடந்தான் பயில்வான்.

சட்டென்று அவன் நின்றான் அதோ! அதென்ன புகை! நெருப்பின் புகையா? ஏதோ பற்றி எரிகிறதே, அதென்ன?

அவன் ஓடினான். ஆம். தீதான். குடிசைகள் சில எரிந்து கொண்டிருந்தன. நாலா பக்கமும் மனித ஓலம். அக்கினியைக் கண்டு அஞ்சி அலறுபவர்களும், எரியும் குடிசைக்குள் அகப்பட்டுக் கொண்டு கதறுபவர்களுமாகப் பற்பல ஓலங்கள். நெருப்போ, மனமற்ற அரக்கனைப் போல் எரிந்து கொண்டிருந்தது. அதன் ஜ்வாலையின் உஷ்ணமே இப்படி அச்சமூட்டுகிறதே, அதன் பிடி எத்தனை கொடியதாக இருக்க வேண்டும்!

எரியும் குடிசை ஒன்றுக்குள் ஓடினான் பயில்வான். நெருப்பைக் கண்ட அச்சத்தில் கைகால்களை அசைக்கக் கூடத் தோன்றாமல் வாய் மட்டும் அழுதவாறு ஓர் ஐந்து வயது ஆண் குழந்தை மூலையோடு மூலையாக ஒடுங்கிக் கிடந்தது. எதிரே தெரியும் கயிற்றுக் கட்டிலில் ஒரு பெண் கிடந்தாள்.

அந்தப் பெண்ணையும் குழந்தையையும் தூக்கிக் கொண்டு அவன் வெளியே வருவதற்கும், அழுத்தப்பட்ட அட்டைப் பெட்டியைப் போல் குடிசை பஸ்மமாகி உள்ளுக்குள் விழுவதற்கும் சரியாக இருந்தது.

அப்போதுதான் கவனித்தான், பயில்வான் கையிலிருப்பது பெண்ணல்ல, பிணம்... தன்னையும் அறியாமல் அவன் பிடி, அந்தக் குழந்தையைச் சுற்றி ஆதரவோடு இறுகிற்று.

குழந்தையை யாரிடம் ஒப்படைப்பது என்று புரியாமல் அவன் அக்கம் பக்கத்தில் விசாரித்தான். அதை விரும்பி ஏற்பார் யாருமே இல்லை!

"என்ன இருக்கிறது உன்னிடம், எனக்குக் கொடுக்க?" என்று உலகத்தை அலட்சியமாகக் கேட்டானே, "இதோ, இந்த அநாதைக் குழந்தை இருக்கிறது!" என்று அது பதிலளித்து விட்டது. குழந்தை மனம் மாருத துறவியின் கையில் ஐந்து வயதுப் பாலகனை ஒப்படைத்துவிட்டு விதி பின்னணிக்குச் சென்று விட்டது!

ஆறு மாதங்களுக்குமேல்கழிந்துவிட்டது. பயில்வான் தாய் வீட்டுக்குத் திரும்பவில்லை.

ஜெயில் அதிகாரி உண்மையான கனிவோடு "டேய், பயில்வான் என்ன ஆனான், பாருடா! பாவம், வஞ்சனை தெரியாதவன்! ஏதாவது லாரிக்கடியில் அகப்பட்டுக் கொண்டிருக்கப் போகிருன்!" என்று ஒரு போலீஸ்காரரிடம் சொல்லி அனுப்பினார்.

அவர் ஊரெல்லாம் அலைப் பார்த்தார். கடைசியில் பயில்வானைக் கண்டபோது, ஆச்சரியம் மிகுதியினால் வாயைப் பிளந்தார்.

உண்மைதான், 'விர்'ரென்று சுழலும் கான்கிரீட் மிக்ஸருக்கருகே, கல் துண்டங்களின் சுமையைத் தூக்கி நடப்பது பயில்வான்தான். அதே ராஜநடை... அதே சிரித்த முகம்... அதே கள்ளமற்ற பார்வை!

அவனை நெருங்கி, "என்ன பயில்வான்! எங்களையெல்லாம் மறந்துட்டியா நீ இல்லாமே ஜெயிலே நல்லா யில்லை!" என்று பரிவோடு சொன்னார் போலீஸ்காரர்.

பயில்வானுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. தன்னிடம் வளரும் அந்த அநாதைப் பாலகனுக்காக — சிறைச்சாலையின் சுகங்களைத் தியாகம் செய்யத் துணிந்து விட்டதை விண்டு விளக்கிச் சொல்ல அந்தப் படிப்பற்ற நல்ல மனிதனால் இயலவில்லை. "தன் தகப்பன் ஒரு கைதி" என்று எண்ணத்தை அந்தப் பிஞ்சு மனம் தாங்காது என்று உணர்ந்தவனுக்கு அந்த உணர்வின் உயர்வை எடுத்துச் சொல்லத் தெரியவில்லை.

ஒரு முறுவலை மட்டும் போலீஸ்காரரின் பரிவுக்குப் பதிலாகத் தந்தான்.

"சிரிச்சா என்ன அர்த்தம் பயில்வான்! எப்போ வரே சொல்லு!"

"வரேன், ஏட்டையா!" என்று சொல்லி வைத்துவிட்டு, இந்தச் சம்பாஷணையால் தடைப்பட்ட வேலையைத் தொடர்ந்தான் பயில்வான்.

காலம் சுழன்றது. வருடங்கள் மறைந்தன. எத்தனையோ மாற்றங்கள்! சிறைச்சாலையின் அதிகாரி மாறிவிட்டார். புதிதாக எத்தனையோ கைதிகள்... போலீஸ்காரர்கள்... பயில்வானின் நண்பன் ஏட்டையா மட்டும் இன்னமும் அங்கேதான் இருந்தார்.

பயில்வானின் உடலில் மாறுதலே இல்லை. நாற்பத்தைந்து வயதிலும் அதே இரும்புத் தேகம்... உலகுக்குத் தானே மன்னன் என்பது போன்ற நடை!

அவனுடைய "மகனே" இருபது வயது வாலிபன். கடந்த சில நாட்களாக இராணுவத்தில் சிப்பாய்.













# சில்வர் ப்ரின்ஸ்

## சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்... உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.

## சில்வர் ப்ரின்ஸ்–சுகமான க்ஷவரம்...சொகுசான க்ஷவரம்

நீங்கள் சில்வர் ப்ரின்ஸ் கொண்டு மழமழப் பாகவும், சுத்தமாகவும் க்ஷவரம் செய்து கொள்ளலாம். ஏனெனில் இறக்குமதி-யான மிகச் சிறந்த ஸ்டேயின்லெஸ் ஸ்டீலில், இந்தியாவில் அதி முன்னேற்ற-




மான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப் படுகிறது சில்வர் ப்ரின்ஸ். நீங்களும் சுகமான க்ஷவரத்தைப் பெறு கிறீர்கள். எனவேதான் சில்வர் ப்ரின்ஸ் முகக்ஷவரத்தை சுகக்ஷவரம் என்கிறோம்.

Grant.S.TM

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

அன்றைய குஜராத்தி மரபினைப் பின்பற்றி சேலை அணியும் பாணி இன்று மீண்டும் மங்கையரினடயே உலவத் தொடங்கி உள்ளது. அதுவும் அணிநதிடும் சேலை மபத்லாலின் 'மெ:ப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலையாக இருக்குமே எனில், அழகு முழுமை பெற்று முறுவலிக்கிறது!

'மெ:ப்ரின்' பாலியெஸ்டர் சேலைகள் பண்டைய கற்பனைகளுக்கு, நவீன ஒயிலோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் நெசவின் நேர்த்தியை கலந்திழைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கின்றன!



**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
நேர்த்தியான துணிமணிகள்

***மெஃப்ரின்***

பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்
உடுப்புத் துணிகள்

AITARS-M. 384 TM

ஏட்டையா பயில்வானை எப்போதாவது பார்ப்பார். பார்க்கும்போதெல்லாம் நின்று இரண்டு வார்த்தைகள் பேசுவார். அவர்களுக்கிடையே ஏதோவொரு பந்தம்—ஏதோ ஒரு சௌஜன்யம்.

பயில்வான் சிறைச்சாலைப் பக்கம் வந்து பதினைந்து வருடங்கள் கழிந்து விட்டன.

இனி அவன் வரவே மாட்டான் என்று தீர்மானித்தார் ஏட்டையா.

அப்போது...

எல்லைப் போர் மூண்டது.

அந்தக் கர்ம யோகிக்கு ஒரு நாள் தந்தி யொன்று வந்தது.

அதைப் படிக்கத் தெரியுமா அவனுக்கு?

எடுத்துக் கொண்டு போய், தனக்குத் தெரிந்த கடைக்காரனிடம் கொடுத்து விட்டு ஆவலோடு நின்றான்.

தந்தியைப் படித்து அர்த்தம் சொன்னான் கடைக்காரன்.

''என்ன! என்ன! இல்லே... இது பொய்... மறுபடியும் படித்துப்பார், ஐயா!''

''உனக்கு அர்த்தம் புரியவில்லையா? நீ சொல்வது பொய்யாகத்தான் இருக்க வேண்டும்.''

''நிஜமாகவா? இது நிஜம்தானா?''

அவன் குழந்தை. இருபது வயது இளைஞன். சாவதற்கு இது வயதல்ல... அவன் எத்தனையோ நாட்கள் வாழ வேண்டியவன்!

பயில்வானின் மனத்துக்குள் எண்ணங்களின் மோதல் முகம் துயரத்தில் கோணிற்று. அழுகை மட்டும் ஏன் வரவில்லை? இதயமே நொறுங்கி விட்டது. ஆனால் வாய் விட்டுப் புலம்பக்கூட ஏன் முடியவில்லை?

அந்தத் துறவி ஒரு கணம் மனிதனானான். நெஞ்சைப் பிளக்கும் துயரத்தைப் பகிர்ந்து கொள்ள ஆதரவான ஓர் இடம் வேண்டும். ஒரு தாயகம் வேண்டும். — தாய் வீடு!

அதோ வருவது யார்? ஏட்டையாதானே?

பித்துப் பிடித்தவன்போல் குனிந்தான் பயில்வான். கையில் ஒரு செங்கல்லோடு நிமிர்ந்தான். எதிரே இருந்த அலுவலகக் கண்ணாடி ஜன்னலின் மீது வீசினான். கண கணவென்று கண்ணாடி நொறுங்கிற்று. ''வீல்'' என்று யாரோ அலறினார்கள்.

பயில்வான் தன் நண்பரிடம் ஓடினான்.

''ஏட்டையா! நான் அந்தக் கண்ணாடி ஜன்னலை உடைச்சேன். வேணுமின்னுதான் உடைச்சேன். உள்ளே யாரோ காயம் பட்டுக் கதறுகிறாங்க! என்னைக் கைது செய்யுங்க ஏட்டையா. தாய் வூட்டுக்குப் போகணும் நான்...அதுதான் நல்ல இடம் ஏட்டையா... இந்தக் காத்தும் சோறும் தண்ணியும் விஷம் ஏட்டையா!'' அவனுடைய கண்களில் இப்போது கண்ணீர் அருவியாய்ப் பெருகிற்று. போலீஸ்காரரின் கைகளைப் பிடித்துக் கொண்டு குழந்தையைப்போல் விம்மி விம்மி அழுதான், அந்த இரும்பு மனிதன்.

வட்ட மேஜை

# வேதம் ஓதும் உதரம் குளிரட்டும்!

நமது மதத்துக்கு அடிப்படை ஆதாரமான வேதங்கள், சுமார் ஐயாயிரம் வருஷங்களுக்கு முன் இக்கலியுக ஆரம்பத்தில் பகவான் வேதவியாஸரால் நான்கு வேதங்களாகச் செய்யப்பட்டு ரிஷி பரம்பரையில் அத்யயன மூலம் ரட்சிக்கப்பட்டு வந்தன. அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் தங்கள் வாழ்நாட்களை வேதத்துக்காகவே அர்ப்பணம் செய்து வந்தார்கள். அவர்களுடைய எளிய வாழ்க்கைக்கு வேண்டிய சௌகரியங்களைச் சமூகத்தினர் கவனித்து வந்தார்கள்.

ஒரு வேதத்தை மட்டும் முறைப்படி பூர்ணமாக அத்யயனம் செய்து, அர்த்தம் தெரிந்து கொள்ளச் சுமார் இருபது வருஷங்களாகும். ஐம்பது கோடி மக்கள் உள்ள நம் நாட்டில் தற்காலம் இந்து மதத்தின் ஜீவநாடியான வேதத்தை அத்யயனம் செய்தவர்கள் சுமார் இருநூறு பேர்களேதான் இருக்கிறார்கள். இதில் வேத பாஷ்யமும் லக்ஷணமும் சேர்ந்து தெரிந்தவர்கள் சுமார் இருபத்தைந்து பேர்களுக்கு மேல் இல்லை. ஏனைய நாம் ஒவ்வொருவரும் தற்கால வாழ்க்கைக்கும் பிற்கால வாழ்க்கைக்கும் ஜீவனோபாயம் தேடுவதில் செலவழித்து வரும் முக்கிய காலத்தை மேலே சொன்ன அபூர்வமான வேத வித்துக்கள் வேதத்தை ரக்ஷிப்பதற்கு அர்ப்பணம் செய்து வருகிறார்கள்.

இவர்களுக்கு நாம் சம்பாதிக்கும் பொருளில் சொற்பமாவது வருஷத்துக்கு ஒரு முறை அர்ப்பணம் செய்ய வேண்டும். அதையும் தானிய உருவிலேயே அர்ப்பணம் செய்து வரவேண்டும். அப்பொழுதுதான் விலைவாசி ஏறிக்கொண்டே வருவதனால் ஏற்படும் சிரமம் அவர்களுக்குக் கொஞ்சமாவது குறையும். தானியம் தன் சொந்த நிலத்தில் விளைந்ததாகவோ அல்லது விலைக்கு வாங்கினதாகவோ இருக்கலாம்.

அகில பாரதத்தில் உள்ள இருநூறு பேர்களில் தென்னாட்டில் உள்ள 125 வேத வித்துக்களுக்குத் தலைக்கு 2 மூட்டை நெல்லை ஆண்டு தோறும் கொடுத்து உதவுவது அனாதி வேத விருக்ஷத்தின் வேரைக் காப்பாற்றின புனித கைங்கரியமாக ஆகும். இக் கைங்கரியத்தைப் பிரதி வருஷம் சித்திரை — வைகாசி மாதங்களில் செய்வது நலம். இந்த தர்மம் நமது வம்சம் க்ஷேமமாக இருப்பதற்கு என்றும் துணையாக நிற்கும்.

இந்தப் புனித கைங்கரியத்தில் ஈடுபடச் சௌகரியமுள்ளவர்கள் அடியில் கண்ட என் விலாசத்துக்கு எழுதினால் இப்போது தென்னாட்டில் வேதத்தை ரக்ஷித்து வரும் வேத விற்பன்னர்களின் பட்டியலையும், விலாசங்களையும் அனுப்புகிறோம். அவைகளை ஆராய்ந்து தங்கள் வேத சாகையைச் சேர்ந்தவருக்கோ தங்களுடைய இஷ்டப்படியோ ஒருவருக்கு இந்தத் தானிய கைங்கரியத்தைச் செய்யலாம்.

இங்ஙனம்,
எஸ். ஏ. அண்ணாதுரை அய்யங்கார்,
நிர்வாக டிரஸ்டி,
வேதரக்ஷண நிதி டிரஸ்டு, 2, ''ஸ்ரேயஸ்'',
6-வது மெயின் ரோடு, சென்னை 600061

VOLTAS




# காஸ்மோபாலிடன்
# அதிநவீன
# 1.5 டன் ரூம் ஏர்கண்டிஷனர்

மிகச் சிறந்த குளுமை தருவதோடு
இந்த வகையிலேயே மிகச் சிறந்த
செயலாற்றும் காஸ்மோபாலிடன்...
இதன் இதர தன்னிகரற்ற
சிறப்பம்சங்கள் இதோ :

- ☐ அதிக தூரம் குளுமையூட்டும்.
- ☐ மிகப் பரந்த இடத்திற்கு குளுமையூட்டும். தானே திறந்து கொள்ளும் 'ஃப்ளிப்-டாப்', அதிவிரைவில் சீரான குளுமை பரப்ப உதவும்.
- ☐ 'தொட்டவுடன் இயங்கும்'— அத்தனை வேகம்.
- ☐ 1.5 டன் முழுமையான குளுமை, ஆயின் மின்சக்திச் செலவோ சிக்கனம்.



**வோல்டாஸ் லிமிடெட்,**
116, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

உங்கள் வட்டாரத்திலுள்ள எங்கள் அங்கீகாரம் பெற்ற வியாபாரிகளை அணுகுக அல்லது அருகிலுள்ள வோல்டாஸ் அலுவலகத்தை நாடுக.




வழங்குவோர் வோல்டாஸ்:
குளுமை தருவதையே
குறிக்கோளாய்க் கொண்டவர்கள்

CMVAC-60-182-TAM

# நமக்ஹராம்

‘உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைப்பவனை ‘நமக் ஹராம்’ என்பர். விக்ரம் பணக்காரத் தந்தையின் பணக்கார மகன். அவனுக்கு நண்பனாக வாய்த்தவன் ஏழைச்சோமு.

தந்தையின் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து யூனியன் தலைவர் விபின் லாலிடம் மன்னிப்புக் கேட்க வேண்டிய கட்டத்தில் விக்ரமாக வரும் அமிதாப் பச்சன் ‘அபிமான்’ பச்சனாகவே திகழ்கிறார். நடிப்பு அவருக்குக் கை கொடுக்கிறது. விபின் லாலை வேர் அறுக்க நண்பன் சோமுவின் திட்டம் பயன்படுகிறது. சந்து என்னும் பெயரில் சோமு தொழிற்சாலையில் சேருகிறான். சேர்ந்து சிறுகச் சிறுக விபின் லாலின் தலைமைப் பதவியைப் பிடித்துக் கொள்கிறான்.

பிடித்துக் கொண்ட பின்? ஏழைகளின் நிலையைப் பார்த்தவன் நிஜமாகவே ஏழைகளுக்குப் பரிந்து கொண்டு வருகிறான். ஆம். பொறுப்பு அவனுக்குப் பொறுப்பை உணர்த்தி விடுகிறது. தன்னை அவ்வளவு தூரத்துக்கு உயர்த்திவிட்ட விக்ரமையே எதிர்கொள்ளும் அளவுக்கு இந்தப் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் ராஜேஷ் கன்னா.

இந்தக் கதையை இந்தக் காலத்துச் சூழ்நிலைக்கு ஏற்பப் பின்னிக் கொண்டு போக ரிஷிகேஷ் முகர்ஜிக்குச் சரித்திரக் கதையான ‘பெக்கெட்’ உதவியிருக்கிறது.

எதையும் கலைக் கண்ணோடு நோக்கும் ரிஷிகேஷ் முகர்ஜி ஒரு மாற்றம் வேண்டியோ என்னவோ இப்படத்தில் வியாபார நோக்கை மேற்கொண்டிருக்கிறார். பலன் பல இடங்கள் ‘மனோரஞ்சன’ப் பகுதியாக விளங்குகின்றன. கதையை நீட்டுவதற்காகச் சில தேவையில்லாத பாத்திரங்களும் இடம் பெற்றுள்ளன.

உதாரணத்துக்குக் கவிஞன் பாத்திரத்தைக் கூறலாம். நடிகையர்களான ரேகா, ஸிமிக்குக்கூட அதிக வேலையில்லை.

ஆயினும் ரிஷிகேஷ் முகர்ஜியின் அநுபவக் கரம் கவிஞனின் உயிரைப் பிரிக்கும் இடத்திலும் உயிர் கொடுத்து, அந்தப் பாத்திரம் அவசியமானதுதானோ என்ற பிரமையை ஊட்டுகிறது. ஆனந்த பக்ஷியின் கருத்தமைந்த பாடல்கள், குல்ஜாரின் இயல்பான வசனங்கள் ஆகியவற்றின் உதவியைக் கொண்டு கருத்துள்ள கதையை வியாபார நோக்கோடு எடுத்திருந்தாலும் ரிஷிகேஷ் முகர்ஜி தம் ரசிகர்கள் விஷயத்தில் நமக் ஹராமாக நடந்து கொள்ளாமல் நியாயம் வழங்கவே முயன்றிருக்கிறார். —ரா. வீ.





## கோடை ஹாஸ்யம்-7

“வெய்யிலுக்கு ஊட்டிக்குக் குடும்பத்தோடு போவதாகச் சொன்னீர்களே. போகல்லையா?”

“ஊட்டிக் குளிரைச் சமாளிக்கக் கம்பளிப் போர்வை, கோட்டு, ஸ்வெட்டர் என்று எல்லோருக்கும் வாங்கினேன்! பணம் தீர்ந்து போச்சு; ஊட்டிக்குப் போகப் பணமில்லாமல் போய்விட்டது, நிறுத்தி விட்டேன்!”

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras - 600031 Editor: K. Rajendran

# இப்பொழுது! யுகோபாங்க் உங்கள் டிபாஸிட்டுகளை கிட்டத்தட்ட **மும்மடங்கு** ஆக்குகின்றது




## நீங்கள் யுகோபாங்க் டிபாஸிட் ஸர்டிபிகேட் திட்டத்தில் பணம் போட்டு வைத்தால்!

இத்திட்டப்படி ரூ. 5000 டிபாஸிட் செய்கிறீர்கள் என்றால், அத்தொகை சரியாக 15 ஆண்டுகளில் கிட்டத்தட்ட மூன்று மடங்கான ரூ. 15,000 ஆகப் பெருகிவிடுகிறது நீங்கள் முதலில் போட்ட பணத்திற்கு இது எவ்வளவு கணிசமான தொகை! இத்திட்டம், குறைந்த தொகை ரூ 100 லிருந்து தொடங்கி அதற்கு மேல் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போகலாம்.

தாங்களே தங்களுக்கு உதவ
மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது




## யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC-20 TAM

